மாத்திரமாய்விளங்கியேவெந்துறுபுரிபோல், வினையிலாப்பரமமுத்தியில்வெளியாய்விமலநல்லருளதாய்விடுமே.

சிவசிற்றறிவுமிம்முத்தவறிவாய்த் திகழ்ந்திடினுடண்மருள்வடிவும், தாவருமோங்காரவ்வடிவாகுந்தக்க சிவன்மூத்தவறிவும், மேவரும்பரமுத்தவ்வறிவாகில் விளங்கு மோங்காரவவ்வடிவும், ஓவவிலந்தவருள் வடிவாகுமொழுங்கிதேயென்றுணர்ந்திடுவாய். (௨௯)

பிராரத்தமுடன் பாடென்றெந்தநெறியும் பேசிடுமின்னெறியதற்குப், பிராரத்தமுடையோரருகரோயன்றும்பிராரத்தம்புசித்திடுவோர்கட், கருதிந்தமாயாதனுகரணங்களதனினுற்சிவத்துவமதனை, உருதுபற்றவராச்சிவன்முத்தர்களென்றுரைத்திடப் படுவதெப்படியோ.

அன்னைதன்முலைப்பாலருந்திடும் பருவமகன்றப்பாற்பருவம்வந்ததற்பின், அன்னை தன் முலைப்பா லருந்தவேண்டிடினுமம்முலைவற்றியேயிடும்போல், பின்னையின்போகம்புசித்திடும்பருவம் பெயர்ந்தப்போகருவம்வந்ததற்பின், பின்னையின்போகம்புசிக்கவேண்டிடினும் பிராரத்தநீங்கியேவிடுமால். (௩௧)



இந்தநல்லொழுங்கின்முன்னிருபதமுமெய்தியிவ்வசிடபதத்தடைந்தால், பந்தமில்சிவத்தைவடிவொடுமடையும்பகுத்தவை யொன்றிலொன்றொதுங்கிச், சந்ததந்தருக்கியசிபதத்தருத்தந்தனைத் தத்தமபதத்தினிலொடுக்கும், அந்தகர்தமக்குமற்றொருகாலு மசிபதமுத்தியேகிடையா. (௩௨)

முத்தியிற்சிவமுமுயிரிரண்டாகின் முத்தி சாயுச்சியமின்றாம், முத்தியிற்சிவமு முயிருமொன்றாகின் முத்தியேபெற்றவனின்றாம்,முத்தியிற்சிவத்துக்குயிரங்கமாயின்மொழியி மற்றவையுண்டாமதனன், முத்தியிற்சிவமுமுயிருஞ்சையோகமொழியுந்தாதான்மியங்குறையே

சச்சிதானந்தத்தற்பரசிவமேதன துதன்னிலையிலே நிற்க, அச்சிதானந்தலீலையினுலே யனேகமாய்ச்சராசரமாகி, சச்சிதானந்தமே யுடல்பொறிகடகு கரணங்களாய்க்கொண்டே, அச்சிதானந்தலீலையி னடித்துமடைந்திடும்பண்டையப்படியே. (௩௪)

ஏகமாயசையாத் தற்பரலிங்கமிலீலையிற் சரமனேகமதாய், மோகமாயிருளாயவ்விருளதனின் மூடமாய்ச்சிறிதுநாளிருந்துஞ்,,சோகமாயிந்தவிருளதாயதனிற்றும

க்குண்டுசிறிதுநாணடித்தும்,பாகமாமோவாயதிற்சின்றுணடித்தும்பண்டுபோ னின்றிடுமென்றே. (௩௫)

சலமது தானேதிரண்டுப்பதாயச் சலம்வந்துள்புகவந்தச்சலமாய், நிலமதின்விளங்கு மஃதினைப்போலநிமலமாமருவருடானே, குலவுலீலையினாற்றிரண்டுருவாகிக்கூறின்றிக்கூறதாய்நடித்தும், இலகன்மாத்திரமாய்நடித்துமுன்போலு மிருந்திடும்பண்டையப்படியே. (௩௬)

சரமந்தவிருளிலிருந்திடுங்காலைத் தனுமுதனன்குமவ்விருளாம், சரமந்தமருளினடித்திடுங் காலைத்தனுமுதனன்குமம்மருளாம், சரமந்தவோவினடித்திடுங்காலைத் தனுமுதனன்குமவ்வோவாம், சரமந்தவருளி னின்றிடுங்காலைத் தனுமுதனன்கு மவ்வருளாம். (௩௭)

இருள்வடிவதுவு மருள்வடிவதெனி லெய்தியே மறைந்திடுமிந்த, மருள்வடிவதுவுமோவடிவதனி மறைந்திடுமோவடிவதும், அருள்வடிவதனின்மறைந்திடு மந்தவருள்வடிவதுவுமச்சிவத்தில், தெருள்வடிவானசத்தியாய்முன்போற்றிகழுமென்றசியுணாத்திடுமே. (௩௮)

அருளுவடிவேமுன்னியல்பான் மாவாணவவிருளுமன்றே, இருளுறுசுழுத்தி விழுங்கிடுமதனுக் கிதமா



யையின்சிருட்டியதாம், மருளுறுகனவுவிழுங்கிடு மதற்குவந்ததுபிரணவசிருட்டி, தெருளுறு மந்தப்பிரணவம் விழுங்கத்திகழுமவ்வருட் சிருட்டியதே. (௩௯)

மருள்வடிவதனில்னீங்குதலின்றிமற்றுமொன்றறிவிலாக்குழந்தை, வெருவருங்குமாரந்தருண மூப்பென்றேவிளங்குதல்போல வான்வாவும், அருள்வடிவதனினீங்குதலின்றி யாணவமாயையோவருளாம், பருவமற்றவையிலந்தந்தவடிவாய்ப் பண்டுகோன்முடிவி னின்றிடுமே. (௪௰)

இருளினிற்பகுப்பின் றியசடமயமாமிம்மருளுதையமதாகின், உருவதாம் பஞ்சபூதமேமயமாமோ வொளியுதையமதாகின், உருவருபஞ்சாக்கரமதேமயமாமோங்கருளுதையமதாகின், அருவதாம்பஞ்சசத்தியே மயமாமாருயிர் வடிவமென்றுணர்வாய். (௪௧)

வடிவதிவ்விருளதாய்நிற்குங்காலை மன்னுயிர்பசுவதாய்நிற்கும், வடிவதிம்மாயையாய்நிற்குங்காலை மன்னுயிர்சீவனாய்நிற்கும், வடிவதவ்வோவதாய் நிற்குங்காலை மன்னுயிர்சீவன்முத்தனுமாம், வடிவதவ்வருளதாய் நிற்குங்காலை மன்னுயிர் பரமமுத்தனுமாம். (௪௨)

இருளுறுபசுவதாய்நிற்குங்காலை யிருளதுவாகியே நிகழும், மருளுறுசிவனாய்நிற்குங்காலை மருளதுவாகியே நிகழும், தெருளுறுமோவின் முத்தனுங்காலைத் தெருள் பிரணவமதாய்நிகழும், அருளுறுபரமமுத்தனுங் காலை யருளதாய் நிகழுமவ்வருளே. (௪௩)

இருளதுவாகி நிகழ்ந்திடுங்காலை யிரும்பதியாகியே நிகழும், மருளதுவாகி நிகழ்ந்திடுங்காலை மகபரமாகியே நிகழும், தெருள்பிரணவமாய் நிகழ்ந்திடுங்காலைச் சிவலிங்கமாகியேநிகழும், அருளதுவாகிநிகழ்ந்திடுங்காலையச்சிவமாகுமச்சிவமே. (௪௪)

அரியவவ்வருளேமூன்றியல்பதுவுமைந்தூற்குறியுமாய்நிகழும், இரியுதலில்லாச்சத்தையாய்ச் சித்தாயின்பமாய்நிற்குதலியல்பாம், கிரியையுஞானமும் மிச்சையதுவுங்கிளர்திரோதையும்பரையதுவும், உரியதுகுறியாம்விரிபிலையைந்தாயொடுங்கிடி லொன்றதாய்நிற்கும். (௪௫)

பிரணவமதுவு மூன்றியல்பதுவும் பிறங்குனமங்குறியுமாய்நிகழும், திரமுறவவ்வுமுவ்வுமவ்வதுமாய்த்திருந்தவேநிற்குதலியல்பாம், உரமுறுநவ்வுமவ்வு மச்சியுமோங்கியவவ்வும்யவ்வதுவும், விரவுறுகுறியாம்விரியிலையைந்தாய் மேவிடிலொன்றதாய்நிற்கும். (௪௬)



மருளுறுமாயை யதுவுமூன்றியல்பும் வகுக்குமைங்குறியுமாய்நிகழும், உருவுறுதமசுர சதசத்துவமா யொன்றியேநிற்குதலியல்பாம், பிருதிவியுஞ் சலமுமனலதுவும்பெருகியவாயுவும்வானும், வருகுறியாகும் விரிபிலையைந்தாய்வந்தொடுங்கிடி லொன்றாய்நிற்கும். (௪௭)

ஐந்தூற்குறியு மூன்றியல்பதுவுமாகியவருளதேயுருவாம், ஐந்தூற்குறியுமூன்றியல்பதுவு மாகியவோவருவுருவாம், ஐந்தூற்குறியு மூன்றியல்பதுவுமாகியமாயையேயுருவாம், ஐந்தூற்குறியு மூன்றியல்பதுவுமாகிய விவையிலூனுளவாம். (௪௮)

உருவமாமுணவே யெதிரதாமுடைய முளத்தினிலுருசிமாத்திரமாம், அருவமாமுணவேதிருத்தி மாத்திரமாயறிவினில்விளங்கிடுமந்த, உருவமாமுணவே சிவருக்குரித்தாமுடையபமிம் முத்தருக்குரித்தாம், அருவமாமுணவேயம்முத்தருக்குரித்தாமெனவறைந்திடும்சியே. ()

உருவமாமுணவா லுருவமாமுடைய வுணவினுலுடையமேமயமாம், அருவமாமுணவா லருவமேமயமா மச்சிவாங்கிசன்வடிவதுவே, உருவமாமுணவாற் சிவனுமுடையவுணவினுற் சிவன்முத்தனுமாம், அருவமாமுணவாற்பரமமுத்தனுமாமச்சிவாங்கிசனுயிரதுவே. (௫௰)

அன்னியதசையையருந்து தன்மனிதர்க்கடாது மற்றதையருந்திடுவோர், அன்னியமிருகாதிகளெனவறையலாகுமற்றதின்சிவாங்கிசரும், அன்னியமாயா வுணவருந்திடுதலடாது மற்றதையருந்திடுவோர், அன்னியமாயாசத்தசிவர்களென்றறைந்திடாலாகுமென்றுணர்வாய்

அசுத்தவிவ்வுணவே புசித்திடுமளவு மசுத்தாவத்தையைநீங்கி,அசுத்தவத்தையினைவிழுங்கிடுஞ்சுத்தவவத்தைவந்தடைதலையிலையாம்,அசித்தவிவ்வுணவைச்சுத்தமதாகவகத்தினிற்பாவனைசெய்தால், அசுத்தவிந்நினைவைநீங்கியந்நினைவையகத்தினிற்பொருந்தியேநிற்கும்.()

திரிவிதகுணத்திற் றமதமோகந் திகழுமிராசதமிராகம், உரியசத்துவமேஞானமதாகுமலகிலிம்முக்குணவுணவே, விரியுமற்றவைவயி லெவைபுசித்ததுவோவிளங்கிடுமக்குணமல்லாமல், அரியசுத்தவத்தை யடைவதேயிலையவவவத்தைவந்துறும்வகைகேட்பாய். (௫௩)

அன்னைதன்வயிற்றிற்புசித்தவக்குணமாயாங்கையும்பொறியுமம்மனமும், மன்னியும்பினு மப்புசிப்புமேன்மிகவும்வாஞ்சையுற்றருந்தியேமேலும், உன்னலும்பொறியுமுடனுமிம்மூன்று மொத்திடுமெனத்தெளிந்துணர்



து, தன்னதுள்ளவையிலுருருசிதிருத்திதனில்வயிராகமேயாகும். (௫௪)

உலகினில்விடையவிச்சையையுடையோ னுணவதற்கேற்கவேகூட்டி, இலகிடப்புசித்தான்முயற்சிமேன்மேலுமேறியேவளர்ந்திடுமதுபோல், குலவிடும்விட்டிவிச்சையேயுடையோன் கொண்டதற்கேற்கவேயுணவை, இலகிடப்புசித்தான்முயற்சி மேன்மேலுமேறியேவளர்ந்திடுமென்றே. (௫௫)

தமகுணப்பசிப்பேமயக்கத்தையளிக்குந் தருமிராசதகுணப்புசிப்பே, மமதையையளிக்குஞ் சத்துவப்புசிப்பேமயக்கமுமமதையுமகற்றி, அமலநல்லுணர்வேயளித்திடுமதனாலவையிரண்டினுநசையகற்றி, நிமலசத்துவவேவருத்தனையாகநின்று சத்துவப்புசிப்பருந்தும். (௫௬)

அடிசின்முன்னுணாக்குமறுசுவையவையை யருந்திடுகாலையினைக்குக், கடினமுமுறைப்பு மிராசதமவையிற்கழிந்திடும்புராதனமுசன், மடிவுறுதமசென்றிருமையுமகற்றி மாலைகாலைப் பொழுதகற்றிக், கடினவுச்சியிற்சத்துவகுணப்புசிப்பேகைக்கொண்டுதினமருந்திடுமால்.

இடம்பொருளேவன்மூன்றையுமுடையோர்க்கித்தகையுணவுறுமந்த, இடம்பொருளேவன்மூன்றையுமக

ன்றோர்க்கித்தகைவுணவுருத்தனால், திடம்பெறவூரினுச்
சியிலேகித்திருவருள்புசிப்பித்தலென்றே,விடம்பெறினு
ங்கைப்பெற்றதையருந்தில் விமலமாய்நின்றிடுஞ்சித்தம்.

தந்திரகிரியை நெறிதனிலீசன்றந்திடப் புசிக்கும்பு
ன்மறைசொல், அந்தநல்லுபாசனநெறியதனி லனைத்து
நாமெனக்கண்டுபுசிக்கும், இந்தவவ்வுணவின் மாறுபாடி
ன்றியிருமையுமிடிந்ததேயாகின், தொந்தமில்சிவமேசடு
முகமாகித் தொக்கிருந்தருந்தன்மேனினைவாம். (௫௯)

இருவகைநெறியும்வரவுபோக்குடைத்தாயியங்கிடு
மிதுவன்றிமாயை, ஒருமுதலென்று மித்தையதென்று
முறைத்திடுநிட்டையும்விகற்ப, நிருவிகற்பமுமாய்நிகழ்
ந்திடுஞ்சகசநிட்டையெக்காலையுமின்றெண், ணொருவிம
ற்றவையைச்சகசநிட்டையனை யுலகெங்குந்தேடியேயி
டுமால். (௬௰)

முன்புறுநிட்டைசவிகற்பமாகி முத்தியின் மூன்று
நின்றிலகும், 'பின்புறுநிட்டைநிருவிகற்பமதாய்ப் பிரம
மற்றொன்றுநின்றிலகும், வன்புறந்நிட்டையிருமையுமு
றினும் வரவுபோக்குடையதாய் நிகழும், இன்புறுநிட்
டைசகசமதாகி யிலங்கிநின்றிடுநின்றபடியே. (௬௧)



சவிகற்பநிருவிகற்ப நிட்டையதுஞ் சத்துவகுணத்
தில்வந்ததுவாம், இவிகற்பநீங்கி வருடமாயிரமங்கிருந்தி
டினும்பினும் விழிக்கும், செவிதனிலடையுஞ் சகசநிட்
டையதேதிருவருடன்னில்வந்ததுவாம், தவிருதல்கூட
லின்றியேயங்குத்தங்கிநின்றிடு நின்றபடியே. (௬௨)

சகசநன்னிட்டையியல்புதம்முயற்சி சற்றொன்று
மின்றியேயருளால், சகமதுபோகமதுவுந் தம்முடலுந்
தருகாரணமுமவையெவையாய், அகமதிலுதித்த தனும
றையாமலகன்றதுபின்னுதியாமல், அகமுணாகாயவருத்
தமேயின்றியமர்ந்துநின்றிடுநின்றபடியே. (௬௩)

அருளண்டமாகிலுயிர்பிண்டமாகுமண்டமுந்தோ
ற்றன்மாத்திரமாய், அருள்நின்றதாகிற் பிண்டமு மது
போலாகியேநின்றிடுமண்டம், அருள்வடிவாகிற் பிண்ட
முமுயிராயருளிற்றாதான்மியமடையும்,அருளந்தச்சிவ
த்துக்கங்கமதாகி யமர்ந்துநின்றிடுநின்றபடியே. (௬௪)

இருளினிலிருந்தும்பருவம்வந்ததற்பினியற்றிடுமு
யற்சியொன்றின்றி, மருளினிலடைந்து மருள்வடிவாகி
வயங்கிடுஞ்சகசமேபோல, மருளினிலிருந்தும் பருவம்

வந்தகற்பின்வருந்திடுமுயற்சியொன்றின்றி, அருளினி
லடைந்திங்கருள்வடிவாகியமர்ந்துநின்றிடுகின்றபடியே.

மருள்வடிவதற்கு பஃறைநானென்றேமனுஞ் சிவ
னுக்குபாதரவாய், மருள்வடிவமுதம் புசித்திடுமதுவே
வயங்கிடுமற்றதையொருவி, அருள்வடிவமுதமுறிடவ
ருந்தியஃதுமிச்சிவனுங்களாந்தே, அருள்வடிவதுவுஞ்சி
வாங்கிசனும்மா யமர்ந்துநின்றிடுகின்றபடியே. (சுசு)

சாக்கிரமதனினிற்குந்தத்துவத்திற் சாற்றுங்கேவ
லத்தினிற்சிறிது, நீங்கிமற்றதற்கு நிற்குந்தத்துவத்தை
நிறுத்துதல்போலநின்பலமாம், சாக்கிரமதனி னீக்குத
லின்றித்தத்துவமனைத்துஞ் சுத்தத்தில், ஆக்கியேநிறுத்
துந்திருவருளதனாலடைந்து நின்றிடுகின்றபடியே. (சுஎ)

மருள்வடிவாகியிருந்திடுமிடமு மருளதாய்ப் புசிப்
பதுமருளாய், அருளிதின்மறைந்து நிற்குமென்பதுவும
ன்றியே நின்றமுன்போல, அருள்வடிவாகி யிருந்திடுமி
டமுமருளதாய்ப் புசிப்பதுமருளாய், மருளிதின்மறைந்
துநிற்குமென்பதுவுமாற்றிநின்றிடுகின்றபடியே. (சுஅ)

சகசநிட்டையது லபித்திடுங்காலை தம்முயற்சிய
தொன்றுமின்றிச், சகசமதாகித் தன்னுளமதனிற்றுனி



ன்றிங்கிடைவிடாதூறும், சுகவருளமுதமதனையேயந்தி
தொல்வடிவதுமெள்ளக்கரைந்து, சுகவருள்வடிவாய்ச்
சுட்டெலாமருளாய்த்தோன்றி நின்றிடுகின்றபடியே. ()

அருளொளியிச்சையதுதனிலுதிக்கிலசைவறநின்
றிடுஞ்சித்தம், அருளொளிஞானமதுதனிலுதிக்கிலகில
மவ்வருளதாத்தோன்றும், அருளொளிகிரியையதுதனி
லுதிக்கிலகத்தினின்றருளமுதூறும், அருளொளியமுத
மருந்தியவ்வடிவாயமர்ந்துநின்றிடுகின்றபடியே. (எ௰)

இருளுறுமவத்தையடைந்தெங்கு மிருளாயிருப்பி
ன்விழித்திடல்போலும், அருளுறுமவத்தைவடைந்தெ
ங்குமருளாயமர்ந்துபின்விழித்திடுமென்னில், இருளுறு
மவத்தைத்தமசினாலடைந்தேயிராசதத்தாற்பினும்விழி
க்கும், அருளுறுமவத்தைச்சத்துவத்தடைந்தேயந்தரா
சதந்திற்பின்விழிக்கும். (எக)

மாயையிதடைந்த பின்பிருளவத்தைவந்தடையா
துபின்படைதன், மாயையின்றமசாலாதலாற்பொக்கும்
வரவுமாய்நிகழ்ந்திடுமதன்மேல், ஆயவவ்வருளையடை
ந்தபின் மாயையடைவதேயிலைபினுமடைந்தால், ஆய
வவ்வருளையடைந்ததேயின்று மடைந்ததுமாயைசத்து
வத்தால். (எஉ)

இருளினிலடைந்துதானுமவ்விருளாயிருந்தங்குநின்றதாயிடினும், அருளினிலடைந்து தானுமவ்வருளாயமர்ந்தங்குநின்றதாயிடினும், மருளினிலடைந்தவடிவநில்லாதுவடிவதிங்கிருத்தலேதென்னில், இருளருளவத்தைதனிற்குணபோதமிலங்கியங்கிருத்தலினன்றே. ()

சத்துவகுணமேவருத்தனையாகித்தங்கியேயுளத்தினுணின்றால், ஒத்துறுநிட்டைகூடிடுமிலதேலொருவியிச்சகலகேவலத்தைத் தொத்துறுமன்றிக் குணமு மாயையினிற்றோன்றினதாதலாலிந்த, ஒத்துறு நிட்டையுண்மையேயன்று முபாசகநிட்டையென்றுணர்வாய். ()

ஆதலிற்சகலகேவலசுத்தமடைந்திட லிங்குமாயையதாம், வாதனையொழிந்துங் குணமிருத்தலினிவ்வடிவகன்றிடிற் பினுஞ்சுத்த, சாதமுற்றிடுதலன்றியேவீட்டைத் தானடைந்திடுதலேயின்றாம், எதயிலருளினுண்மைநிட்டையினையெய்தினோர் சிவன்முத்தர்களே. (எரு)

சிவனிம்மாயைதனின்முத்தனருளிற் சிவன்முத்தன்னடுகோவின், மேவலிற்சிவன்றனக்கந்தவருளு மெய்முத்தன்றனக்கு மாயையுமில், சிவன்முத்தனுக்கேரியின்கணாமீதிற்றிகழ்ந்திடுவோனைப்போற்றோன்றும், வஆ



துகாகங்கண்கரிதுதிக்கை யரிதல்போற் காகங்கண்மணி போல். (எசு)

அந்தரவடிவசிவன்முத்தர்களிவ்வடிசிலைப்புசித்ததேயின்றாம், இந்தவிவ்வுலகி லிதுபுசித்திடுவென்றிங்கெறியோகணின்றிறைஞ்சித், தந்திடிலுணவு மளவின்றிப்புசிக்குஞ்சமித்ததுமலமதுமாகா, மந்திரமதனைவடிவதாய்க்கொண்ட மகிமையிலென்றுணர்ந்திடுவாய். (எஎ)

எங்கெங்குநோக்கின் மருண்மயமாகியிருந்திடும்பந்தமாந்திசையில், தங்குந்தன்வடிவ மருண்மயமாகித்தயங்கியேநின்றதுகுறிபோல், எங்கெங்குநோக்கிலருண்மயமாகியிருந்திடு முத்தியாந்திசையில், தங்குந்தன்வடிவமருண்மயமாகித் தயங்கியேநிற்குதல்குறியே. (எஅ)

அருள்வடிவதுவே பார்வை யிற்றெருக்கிலகப்படாதென்றுநின்றிலகும், மருள்வடிவதுவேபார்வையிற்றெருக்கில்வந்தகப்பட்டுநின்றிலகும், அருண்மருணடுவாமோ வடிவதுவேயகப்படும்பார்வையொன்றுக்கே, மருள்வடிவுலகுமோ வடிவோர்க்கு வாய்த்திடும் பார்வையொன்றுக்கே. (எகூ)

பழுதையிற்கிளிஞ்சில் கட்டையினின்றும்பாம்பும் வெள்ளியுங்கள்வனும்போல், எழுதருமாரோபித மநிட்

டானமிலங்கிடி விலாததுபோலும், முழுதுணர்சிவம்வந்துதித்தவிச்சீவன்முத்தருக்குலகமின்றுதித்தல், கழுதிரதம்போற்காட்சிமாத்திரமாய்க்கவும்விவகாரமேயின்றும்

கனவதுபோல்விவகாரமுண்டென்னிற் கனவதுநீங்கியேவிழித்தால், கனவிதென்றுணரு மாங்கவர்தமக்கக்கனவுவந்துதவுதலுண்டோ, கனவுமுன்கண்டநினைவு மாத்திரமாய்க்காணுறுமகத்ததுபோல, கனவிந்தவுலகுஞ்சீவன்முத்தருக்குக்காணன்மாத்திரமதாய்நிகழும். ()

சொற்பனமதனிற் கனவிதென்றிடு மோர்சொற்பனசாக்கிரநடுவே, நிற்பனபோலுமருள்மருண்டுவே நின்றிடும்பிரணவவடிவம், சிற்பரசிவன்முத்தனவ்வடிவாய்ச்செகமிதுஞ்சிவமதுந்தோன்ற, நிற்பனதனக்குநிழலின்றிழற்போனிலத்தடியின்றியேநிகழும். (அஉ)

வெந்துறுபடமும் வறுத்திடும்வித்தும் விளங்கிடுங்கானலிற்சலமும், இந்திரதனுவுங்கனவிருந்தகன்றவிடமதுமிங்குமுன்னிருந்த, முந்துறுகடமுங்கடமதையெடுத்துமுடிந்தபின்றிகிரியிற்சுற்றும், கந்துறுகரும்போன்முத்தர்வடிவுங்காட்சி மாத்திரமதாய்நிகழும். (அங)

மண்ணினிற்றடுக்கச் சலத்தினினனைக்கவருங்கனலிற்சுடவளியால், நண்ணிநின்றசைக்க வெளியிடம்விட



வேநணுகிடாவதன்றுநின்றிலகும், புண்ணிய சிவன்முத்தர்தம்வடிவம் பொற்புறவவ்வடிவுகண்டளவே, விண்ணின்மண்ணினிற்பா தலத்தினினுள்ளோர் வியப்பொடுமெழுந்திறைஞ்சிடுவோர். (அச)

மூன்றுநற்சுடரினின்னையொப்பவராய் மூன்றுகாலமுமுணர்ந்தவராய், மூன்றுலகத்துமுவமையில்லவராய்மூன்றுலகும்மறிந்தவராய், மூன்றுநற்காண்டமுந்தெரிந்தவராய் மூன்றுசிற்பதமுமுற்றவராய், மூன்றுமுன்மலமு மொருங்கறுப்பவராய் மூன்றுதாபமு மகன்றவராய். (ஆரு)

அகவிருண்மாயைக்கருமமிம்மூன்றுமகற்றியேசுத்தங்கமாக்கித், தகநிறுத்திடுதல் கையதாமப்பாற்றன்னுபிராகியேநிகழும், சுகசிவவுதையமாக்குதுரியாஞ்சொற்றிடுதீக்கையினருத்தம், ஜெகமிதிலவையிற் பாவனைகடந்துசெய் தங்குநிறுத்தவல்லவராய். (அசு)

பிரணவமுதேபுசித்தனுதினமும் பிரணவமயமதேயாகி, மரணமதுறு மிம்மனிதரைப்போலவுடிவமாத்திரமதேதோன்றிப், புரணநல்லொளிக்குமாயைக்குருடுவேபுகுந்திருந்திலங்கு நற்குருவைச், சரணெனவடைந்திங்கவனருளாலேதரிக்கப் பெற்றுங்கத்திலிங்கம். (அஎ)

தேகமும்பொறியுங்கரணமுமுயிருந்திரிவுறுமாயை யின்மயத்தை, ஏகநின்றகற்றித்தீக்கையிலாசானிவைக் கதிட்டானமந்திரமே, ஆகநின்றமைத்தவகை குருவரு ளாலறிந்ததிற்பாவனைதிடமாய், ஊகமதுடனே முன்னி னைவகற்றியுளத்தினிற்சகசமேபிறந்து. (௮௮)

இக்குலந்தனக்கிச்சமையமதென்று மியம்புதலிலை யதனாலே, இக்குலந்தனைவிட் டெச்சமையத்துமெய்து தனியாயமதாகும், இக்குவலயத்தி லெச்சமையத்து மி லங்கிடுஞானமுண்டதனால், இக்குவலயத்தி லெச்சமை யத்துமியற்கையை விட்டிடலாகா. (௮௯)

அன்னியசத்தங்கவருதலகற்றி யன்னியரசனையும கற்றி, அன்னியரூபநோக்குதலகற்றி யன்னியபரிசமு மகற்றி, அன்னியசத்தங்கேட்குதலகற்றியன்னியநினை வதுமகற்றி, அன்னியருடனே யிணங்குதலகற்றி யன் னியருறைவிடமகற்றி. (௯௰)

அன்னியற்கையில் வாங்குதலகற்றி யன்னியர்க்கீ ருதலகற்றி, அன்னியகடவுள்வணங்குதலகற்றி யன்னி யகிரியையுமகற்றி, அன்னியநூலையோதுதலகற்றி யன் னியகேள்வியுமகற்றி, அன்னியபாக மருந்துதலகற்றிய ன்னியவகையறத்துடங்கி. (௯௧)



சமையநற்கிரியையனைத்தையும்விடினுந் தனக்கந் தப்பிரணவவமுதம், அமையநின்றூறியதனையேயருந்தி யவ்வடிவாயிடுமெனவும், சமையிகள் பாகமதனையேகொ ண்டுதற்பரநிவேத்தியம்புரியும், அமைதியை விட்டான் மேற்கொளா தென்பதறிந்ததைநியமமாய்க்கொள்ளும்.

புரிசடையோனுக்கற்பித்துக்கொளினும் பொருந் தியபொருளதேவேண்டும், திரிவின்றி யொன்றாய்ப்பாவி த்துக்கொளினுஞ்செல்லல்போலொழுங்கதேவேண்டும், அரியநல்லறத்தைவேண்டிடிற் பொருளுமறமதாயிட்ட வேண்டிடும்போல், உரியதற்சமையத் தொழுங்கினிற்பு சித்தாலுளத்தழுக்கின்றியேவதியும், (௯௩)

ஞானசங்கமத்துக் கிந்நெறியதனி னவிற்றிடுஞ்சா தியுஞ்சமையத், தீனமிலாசாரமும் விசாரித்தலியற்கை யேயன்றவரேனும், ஊனமிலக்கந்தனி லிங்கமொன்றே யுள பிரமாணமாய்க்கொண்டங், கானநற்பயிக்கமவர்ம னைதோறு மங்கையே றருந்திடலாமால். (௯௪)

சடுத்தலமதினுமிலிங்கமேயாகித் தானெனல்விடு த்தருந்தியபின், கொடுத்தவன்றானுங் கொடுத்திடுபொ ருளுங்கொள்ளுவோன்றானுமொன்றாக, அடுத்தவிம்மா

யாவடிவதைநோக்கியகற்றியவ்வோமயமாக, விடுத்தனு
தினமும்புசித்திடிலனைத்தும்விமலவோமயமதாய்விடுமே

இன்னதன்மையவாஞ் சுத்தபாவனையி லிரும்பிரா
ரத்தம்போயொளித்துத்,தன்னதுணின்றிங்கிடைவிடா
தாலுந்தக்கதோற் பிரணவவமுதம், அன்னதையருந்தி
மூன்றவடிவதுவு மங்ஙனமோமயமாகி, இன்னிலமதனிற்
றோற்றன்மாத்திரமா யியங்குதற்சிவன்முத்தியதே. ()

அறியவிலாக்குழந்தைப்பருவத்தின் முலைப்பாலரு
ந்திடுங்குமாரங்காளையினில், அறிவிலாக்குழந்தையருந்
துதல்கண்டு மதினசைசகசமாயிலதின், அறிவிலாச்சிவ
த்துவப்பருவத்தி னருந்திடுமாயையினுணவை, அறிவி
லாச்சிவரருந்துதல்கண்டு மதினசைசகசமாயின்றும். ()

அனமதும்பாலுஞ் சருக்கரைகண்டு மங்கினிவகை
களுந்தேனும், இனமவையொன்றாய்க்கூட்டியருசியினி
தைபகின்றிடைவிடாதாறும், கனபிரணவ வமுதத்தை
யேபருந்திக் களிப்பவர்மீட்டு மிச்சகத்தின், பினமுறு
விடையவின்பை யெண்ணிடுமோ பிராரத்தமும் மிலை
யவர்க்கே. (௧௮)

உபையநல்லமுதே புசித்தனுதினமு முபையமே
வடிவதுவாகி, அபையமென்றுரைக்கு முயிர்களுக்கிரங்



கிபஞ்சலென்றவர்களைநோக்கி, உபையவந்நெறியின்பய
னைமுன்னுணர்த்தியுபநிடச்சுருதிகின்னுரைக்கும், அபைய
யமற்றொன்றுமிலாத விந்நெறியே யனுக்கிரகம்புரிந்திடு
மால். (௧௯)

இந்நிலைசின்னாட் சிவர்கணிமித்த மிருந்தனுக்கிரக
மேபுரிந்தும், தந்நிலைபதனினின்றருளமுதந்தான் புசித்
தருண்மயமாகி, அந்நிலைபரமமுத்தியிற் சிவத்துக்கங்க
மாய்நிகழுமுன்போலென், றிந்நிலைசாமத்தசிபதமுளாக்
குமிதுசிவாத்துவிதமென்றுணர்வாய். (௨௰)

என்றெனையாண்டவிருத்தவம்பிகையே யிதைய
த்தும்விளக்கியென்வாக்கும், நின்றுரைத்திந்தநெறிசொ
லுமருத்தகினக்கும்வாய்த்திடுமென்றுவாழ்த்திச், சென்
றெனதுடலுங்கரணமுஞ்செகமுஞ் சேர்ந்திடும்போகமு
ந்தானாய், நின்றனள்கண்டேனிதற்குக்கைம்மாறென்னி
ருமலைவாழிநீடுழி. (௨௰௧)

சுத்தசாதகம்-முற்றிற்று.

---



உ

திருச்சிற்றம்பலம்.

மூன்றாவது,

# விஞ்ஞான சாரம்.

காப்பு.

## பாயிரம்.

விநாயகர்-துதி.

அஞ்சுகரமுடைக் - குஞ்சரந்தனைத் *
தஞ்சமென்றுநில் - கொஞ்சமென்றயில் *

(வேறு.) பெரியநாயகியார் துதி.

அமலபஞ்சகிருத்தியங்கண்டத்துமதற்காதாரமாகி
னானை, விமலருளத்தகலானை யெனையொர்பொருளாயா
ண்டவிஞ்சையானை, நிமலமுதுகிரியிலமர் பெரியநாயகி
யையொருநிமலைதன்னை, மூமலவிருட்கிரவியை யென்
கண்மணியைப்பணிந்திடுவாமூன்றுபோதும். (க)

(வேறு.) இதுவுமது.

ஊனாயுழல்வென்றனையாண்ட வுமையே பனையே
யுயிர்க்குயிரே, தானாய்நிகழுஞ்சுயவொளியே தாயேவி



ருத்தவம்பிகையே, ஞானானந்தரசம் விளக்கும் ஞான
சாரமெனக்கருளி, நானுய்நீயேயென்னுடையநாவினின்
றுமுரைசெய்வாய். (க)

அருளுமுமையினடிபணிந்தேயஞ்ஞானத்தின்றிமி
ரகன்று, மருளுமயமுமில்லாத மாவீட்டின்பரசம்விளங்
கச், சுருதிநெறியிற்பிசகாதுசொல்லார்த் தங்கடமைய
மைத்திவ், வொருவிஞ்ஞானசாரமதையுரைத்தேன் ப
ரையினருளாளே. (உ)

பாயிரமுற்றும்.

## நூல்.

முன்னாட்புரிந்ததவப்பயனான் முதல்வனொருவனு
ளனென்றே, அன்னான்பணியே முத்திபதமடையக்கூ
ட்டுமெனவெண்ணிப், பின்னாசான் முன்னாருமூன்றும்
பேணியொழுங்கிற்சாதனங்கள், மன்னான்கினையுமுடை
யோனை வகுத்தவிந்நூற்குரியவனாம். (௩)

சத்யாசத்யவஸ்துவினைத் தகவேபிறித்துத்தானறி
தன், மித்தையானபோகத்தின் விராகம்பெறுதல்சமை
யாதிக், கொத்தானவைகளோராறுங்கொள்கைதனிலே
பெற்றிடுதல், அத்தியான்மீகமுத்திதனி லபேட்சையாந்
தன்மைநான்காம். (௪)

சித்தம்பிரகாசத்தையுறிற் சேருநான்கு சாதனமும், சத்தினிபாதந்தான்பிறக்கிற் சாருமொளிசித்தந்தனிலே, ஒத்துவினைகடள்ளுபடியுண்டாஞ் சத்தினிபாதமதும்,பத்திபுரியின்மூவடிவிற்பண்டார்வினைகள்சமமாகும்

விடையம்மதின் மோகியைப்போல விமலந்தானே மூவுருவாய், அடையுமெனவேகண்டவுடனடிகள்பரவியன்பாகத், தடைகளிலதுகாயமனந்தனமீந்திடிற் சார்ந்திடுகென்மம், உடையுமலதுமற்றொன்றுமுடையாதிதுவேயொழுங்காமால். (௬)

தந்தைதனது சுதர்கையின்முன் றந்துபொருளைத் தானேபின், சிந்தைமகிழ்ச்சியுடனிரக்குஞ் செய்திபோலமூவடிவாய், வந்துசிவமேயிரப்பாகவாங்குந் தனதுமாயையினை, இந்தவகையையுணர்ந்தினிபிறவும வினைகளொன்றறிவாய். (௭)

மூன்றுவடிவாய் மும்மலந்தைமூன்றுபங்காய்த்தான்கொண்டு, மூன்றுங்கெடுத்தமதுடையமூன்றுபொருளும்பங்காக்கி, மூன்றுவடிவுங்கைக்கொளவே மூன்றுமுதலுமானசத்தே, மூன்றுவடிவாமெனப் பொருள்களை மூன்றுமீந்தேபணிபுரிக. (௮)

இந்தத்திறனிற் கனிவிடைகளியற்றி வினைகள் சமமாகில், அந்தாடங்களொத்துகிற்குமாந்தத்தாசினுமே வ



போல், புந்திக்கிலேசமேயின்றிப் போதஞ்செவிதாம்வினைகள்கெடும், சந்திப்பதுவாமப்பொழுதே சத்தினிபாதந்தான்பிறத்தல். (௯)

சத்தினிபாதந்தான் பிறந்து சாற்றுமந்தர்கரணங்கள், சுத்தியதாகினவ்விடத்திற்றொன்று நான்குசாதனமும், எத்திறத்தானும்வேறொன்றெய்தாதெய்திற்றாயினும்பின், குத்திரமாகிப் போமெனவேகொள்ளார் மேலோரீதன்றி. (௰)

சத்தாசத்துவத்துவினைத்தகவேபித்துத் தானதில், கொடுதாய்மற்றுமும்மூன்றுங்கூட வுடன்வந்தவனையுறும், அக்காலதுவேயென்றுரைக்குமமலவாக்கியப்படியே,ஒத்தாற்பிரமந்தானேயேயுணருங்குருவினருளாலே

இந்தநான்கு சாதனமுமில்லாதவர்கட் கொருக்காலும், அந்தஞானம்வெளியாகாதங்கி நயனத்தொடுதோன்றிப், பந்தமறவேயுரைத்திடினும்பாழுக்கிறைத்தநீரொக்கும், முந்தநான்குசாதனமு முத்தியடைவோர்க்குறவேண்டும். (௧௨)

பணடித்தலத்தையுழவாளர் பண்டிமுகத்திற்சோமூப்பிணிக்கின், மண்டித்தடையற்றுமூஃதின் பயக்கமுடையோர்க்கறிவருளின், மிண்டிபயமுமறமும்விட்

டுவேண்டும்படியேசரிக்குமெனக், கண்டிச்சிறத்தோர்க் குபதேசங்கழலார்ஞானசற்குருவே. (௧௩)

இந்நேர்நெறியிற்சாதனங்களிவைநான்கினும்வந்தெய்தியதேல், தன்னேர்குரவன் றனையடைந்துசாற்றுஞ் சீடாசாரமுறை, அந்நேர்பிசகாதேவல்புரிந்தருடன்மீதிற்சுரப்பளவும், பின்னேதிரிந்துமவன்கொடுக்கப் பெறவேவேண்டும் விஞ்ஞானம். (௧௪)

ஞானமார்க்கமிருவகையாய் நவில்வர்விகங்கம்பிபீலிகையென், றனவவ்வையில்விகங்கமேயமலவேத முடிவதனின், ஞானமாகும்பிபீலிகையே நவிறந்திரத்தின் ஞானமாம், ஆணவிகங்கத்துணராமற் றதனின்வழியேயுணர்ந்திடுவாய். (௧௫)

ஆசர்ன்மாணுக்கன்னுடைய வதிகாரங்க ளவைபார்த்தே, பேசானிற்கும்விகங்கமதைப் பிரமமொன்றுமேமெய்யாய், மாசாருலகம்பொய்யாகமாணுக்கன்றனனுபவத்தில், தேசாய்விளங்கி யக்கணமே சிரத்தை பிறந்துதிடமாக. (௧௬)

தோன்றுமுலகமெய்யாகிற்றோன்றுமதிலேவிடயங்கள், தோன்றுமந்தவிடயமதைத் தோன்றவரிய வைம்பூதம், தோன்றுமிந்திரியந்தோன்றுந் தோன்றிமந்தக்கர



ணங்கள், தோன்றும்புருடன்காலபரந்தோன்றும்வியோமம்பரந்தோன்றும். (௧௭)

உலகமெதினின்றுதித்திடுமென் றுன்னிநோக்கினினைவதனில், இலகவுதிக்குமெனநினைவு மெதினின்றுதிக்குமெனநோக்கில், திலகவறிவுதனிலொன்றே சேரவனைத்துமறிவானால், கலகமிடுதத்துவமெல்லாங் கலங்காவறிவாயேகரையும். (௧௮)

உலகடலங்கும்வகையுண்டா யுதித்தின்பமதாயுருநாமத், திலதவிளங்குமிவையைந்தியம்புமுன்மூன்றங்கிசமும், குலவுசொரூபசம்பந்தங்கூறும் பினிரண்டங்கிசமும், கலகமாயாசம்புந்தங் கருதினோக்கிற்கற்பிதமே.

மூன்றங்கிசமுமதிட்டானமொழியும்பி னிரண்டங்கிசமும், ஆன்றவதிலாரோபிதமா மதனாற்சொரூபங்காரணமாய், தோன்றுமுலகுமசத்தாகுஞ் சொரூபமொன்றேசத்தாகும், ஊன்றிநோக்கிலெக்காலுமுளதேதோன்றுமிலதிலமே. (௨௰)

நாமரூபந்தனைமெய்யாய் நாடுமிடத்தின் முப்பொருளாம், நாமரூபந்தனைப் பொய்யாய்நாடுமிடத்திலொருபொருளாம், நாமரூபந்தனை மெய்யாய்நாடிற்சீவனவனேயாம், நாமரூபந்தனைப்பொய்யாய்நாடிற்பிரமமவனேயாம்

ஆடியதனிற்றோன்றுநிழலதுபோல் விகற்பந் தீர்ந்தறிவில், கோடிவிவிதசகந்தோன்றுங் கொளுங்காரணகாரியமின்றி, நாடிவேறுபோற்பாய்தனுகமதத்தாற்றன்னிழலே, ஓடிப்பாயுமதுபோலென்றுரைப்பார் பிரமவாதிகளே. (உஉ)

ஒருவிகற்பங்களுமில்லாவொன்றும்பிரமவதினின்றே, ஒருவிகற்பநினைவாலேயுலகு சிவபரமாகும், ஒருவிநினைவைமுப்பொருளுமொடுங்குமதுவேமுப்பாழும், ஒருவிகற்பநினைவதனுக்குதிக்கவொடுங்கவிடமிதுவே. ()

தனதுமாயைதன்னாலே தனையேயனேகமாய்க்காணும், தனதுஞானந் தன்னாலே தனையே யேகமாய்க்காணும், தனதுசத்தியிவையிரண்டுஞ் சத்திமானுந்தனையன்றி, தனதுசத்திவேறாகாததனாற்றானே தானிகழும்()

என்றுநிலையி லொருபடியாயிருந்துதனையேகண்டிருக்கச், சென்றுநினைவிற்பரசிவசெகமாய் விரியுமுன்னிலையில், நின்றுநினைவைத்தானொடுக்கி னேரேமூன்றுஞ் சென்றொடுங்கும், என்றுகண்டோன் மூன்றும்பாழிறந்தசொரூபமேயன்றோ. (உரு)

அடியுமுடியுநடுவுமிலா வகண்டவொளியா மொருதனையே, கடியநினைவாமாயையினாற்கலங்கிவேறாயனே,



கமாய்ப், படிகமலையிற்சுணங்கனைம்போற்பார்த்தலைவேயதிட்டான, முடிவிறன்னைத்தான்கண்டே மோகமின்றிப் பார்த்திருப்பார். (உசு)

இந்தநெறியி லுணராதார்க் கியம்பும் பிபீலிகையினெறியை, வந்தவழிக்கும்போம்வழிக்கும் வாதமின்றியொழுங்காகப், பந்தமவையை யபதிகொடு பார்த்தேயொன்றொன்றாயகற்றி, எந்தப்பொருணின்றதைக்கண்டேயெல்லாமதுவாயுணர்ந்திடுக. (உஎ)

வந்தவாறுநெறியுரைக்கின் மாயைதோன்றும் பிரமத்தில், அந்தமாயைதனிலீச னகிலவிடையமாய்நிகழும், இந்தவான்மாமற்றவையிலேகதேசவிடையமாம், வந்தவாறேயொடுக்கிவிடில்வயங்கும்பிரமமேயென்றும்()

அந்தப்பிரமந்தனினின்றே யனுர்வாச்சியமாம் பினைதோன்றும், அந்தப்பினையின்மாயைவருமதனிற்பரதத்துவமதனில், வந்தப்படியேவியோமமதில்வருங்காலபாமதினின்றே, தொந்தப்புருடன் புருடனிலே தோன்றும்பகுதி பகுதியின்மான். (உகூ)

மதியினகங்காரந்தோன்றுவகுத்த மூன்றுகுணமாகும், அதிகசாத்துவிதகுணத்திலாகுமன ஞானேந்திரிய

ம், விதியாயிராசதகுணத்திவ் வெளியாங்கருமவிந்திரிய
ய்,ஓதியதமசுகுணத்தினுனுண்டாந்தன்மாத்திரையைந்தும்.

அவையைப்பஞ்சீகரணஞ்செய்யிலாகு மைந்துமா
பூதம், இவைகளிருபத்தெட்டுமுட னியம்புமாயையின்
னையுமே, கவைசெய்முப்பதாகு மிவைகண்டபடியே
தானெழுங்கில், சிவையினருளானி யதிபணிற்சேரும்பி
ரமந்தானுக. (௱௧)

முப்பதினையுநீங்கிநிற்க மொழியுமவத்தைப் பத்தா
கச், செப்புநனவுகனவினுடன் சிவசுழுத்திபரநனவு, வெ
ப்புவகன்றபரகனவுவியோகஞ்சிவசாக்கிரங்கனவு, ஒப்பு
மிலதுமூன்றுப்பா மூண்மையானகுருவொன்றே. (௱௨)

வேறு.

நனவதனில்விசுவன்கனவினிற்றை சதனுகும், ந
ன்னரியசுழுத்தியினிற்பிராஞ்ஞன்பரநனவில், கனவிரா
ட்டன்கனவிலிரணியகெர்ப்பனுமாங் கருதரியபரப்பாழி
லவ்வியாகிருதன். உனவரியசிவநனவிற் சிற்சொலிதை
விசுவம், ஒடுங்கிபிடுஞ்சிவகனவிற்பிரசாபத்தியனும், வி
னவரியபின்னையினிற்பொற்புவிசுரந்தனுமாய், விளம்பி
டுவாரியானிபவத்தை யொன்பதினுமே. (௱௩)



நனவதனிற்பூதஞ்சூக்குமபூதமறியும், ஞானவிந்தி
யங்கன்மவிந்திரியமிவைகள், கனவதனின்மனமதிமற்ற
கங்காரமூன்று, கருத்தொடுங்குஞ் சுழுத்தியினிற்பகுதி
பரநனவில், அனவுருன்பரகனவிற் காலபரம்வியோமம்,
அதீதமதிற்சிவநனவிற் பரதத்துவமந்தக், கனமதனின்
மாயையுபசாந்தமதிற் பின்னை கண்டிவ்வொழுங்கினில
கற்றிற்காணுமந்தவீடே. (௱௪)

வேறு,

பிண்டந்தானுய்கின்றறிவைப் பிறிக்கிலந்த வனுப
வத்தில், அண்டந்தானுய்கின்றிடு மற்றந்தவறிவைத்தா
ன்பிறிக்கில், கண்டவிவைகட்குட்புறம்பாய்க்கலங்காவ
றிவாய் நிகழுமிதை, உண்டபொழுதேபொ னிற்பணிக
ளொன்றும்போற்சித்தொன்றேயாம். (௱௫)

பூதநீங்கிற் பகுப்புபோம் பொறிகணீங்கிற் காட்சி
போம், ஓதந்தக்கரணம்போகி லுளவாதனைபோ மிருள்
போகில், போதன்றூன்றும் புருடன்றுன்போகிற்சர
வசூத்வாதி, போதம்போகுங் காலபரம்போகி லவ்வாத
னைபோரும். (௱௬)

வந்தவியோகநீங்கியிடில்வாங்குமிரண்டாம்பாழ்பர
த்தின், தொந்தநீங்கி லுலகம்போந்தோன்றுமாயைதானீ

ங்கில், பந்தமுறுமவ்வாதனைபோம் பகர்வொண்ணாப்பி
ணைநீங்கில், அந்தமூன்றும்பாழ்போகுமனைத்துமானசிவ
ந்தோன்றும். (௩௭)

ஏதேதகன்றதது முன்னமியற்றுந் தொழில்கடன்
னிடத்தப், போதேயகன்றவ்வனுபவத்திற் போக்கவே
ண்டியதெலாமகற்றி, ஈதேயுளமற்றவையெல்லா மில்ல
தெனவேயுணர்ந்தவையும், ஈதேயெனக்கண்டச் சிவத்
தையிடைவிடாதேபார்த்திருப்பார். (௩௮)

நேரே நெறியிலடைவோர்க்கு நியதிநெறியி லடை
வோர்க்கும், ஊரேதொன்றேயோ'ரொருவர்க்கோரொ
ன்றதனிற் சம்மதமாம், ஆரேயெனினுமிவையி லொன்
றிலாசானான்மாணாக்கனெனத்தால், சாரேதொன்றுமில்
லாததனிவீடேதாமாகுவரால். (௩௯)

அறையிவ்வொழுங்குகளிலொன்றிலாசா`னான்மா
ணாக்கனெவ்வக், கறைசெய்யைம்பூதங்கண் முதற்கழ
றொணாதபினையீறாய், இறையேயெனினும் வேறின்றி
யெல்லர்ந்தானாயேகண்ட, நிறைவோ ரறிவின்மகிழ்ச்சி
யினானின்றுகூறுதிலைகேளாய். (௪௰)

நானேயென்று மெவ்விடத்துநன்றா யுண்டாயிருக்
குகேன், நானேயென்றுமெவ்விடத்து நன்றாய்த்தோன்றி



விளங்குகேன், நானேயென்றுமெவ்விடத்து நன்றாயின்
பமாய்நிகழ்கேன், நானேயென்று மெவ்விடத்துநன்றாய்
விளையாடாநிற்கேன். (௪௧)

உண்டாயென்று மெவ்விடத்துமுளதாயிருத்தலெ
ன்சத்தே, உண்டாயென்றுமெவ்விடத்துமுளதாய்விள
ங்கலென்சித்தே, உண்டாயென்றுமெவ்விடத்துமுளதா
மின்பமென்னின்பே, உண்டாயென்று மெவ்விடத்துமு
ளதாயென்னுள்யான்மகிழ்கேன். (௪௨)

இருக்கேதோன்றியிடவேண்டு மெந்தப்பொருளே
யானாலும், இருக்கேதோன்றியிடும்பொருளே யின்பமா
கியேநிகழும், இருக்கேதோன்று மெவ்விடத்துமென்று
நிகழ்தலொருநானே, இருந்தேதோன்று மென்னிடத்தி
லின்பமா யானேமகிழ்கேன். (௪௩)

எனதுசுய லீலையினாலே யென்னைத்தானே நானா
வாய், எனதுசத்திதன்னாலேயின்னானன்னானிதுவதுமற்,
றெனதுபிறரதிதுவதுவென்றெண்ணி மானமுடைத்தா
கி, எனதுகண்ணேயான் றானேயிருந்து விளையாடாநிற்
கேன். (௪௪)

எங்கும்விடையமாய் நிகழுமீச்சனா யங்கங்குத்,
தங்குமுயிர்களவைநானாய்ச் சாற்றுஞ்சங்கற்பமுநானாய்,

அங்குநாமரூபமதையையஞ்செய்யுமனநானாய், அங்குக் துணியுமதிதானாயபிமானகங்காரமுநானாய். (சரு)

சித்தநானாய்ச்சத்தமுன்னாய்ச் செப்புங்கந்தமீறாக, ஒத்தவிடையமைந்தினையு முணருஞானேந்திய நானாய், சத்தமுதலைந்தினையுணர்ந்து சாற்றும்வசனாதிகள்செய்ப, வைத்தகருமேந்தியநானாய்வகுத்துவிளையாடாநிற்கேன்

உம்பர்நானாய் நரர்நானாயூர்வநீருறைவநானாய், வெம்புமிருகங்களுநானாய் விகங்கநானாய்த்தாபரநானாய், அம்புநானாய்ப்புவிநானா யனலுநானாய்வளிநானாய்த், தம்பமவாகாயமுநானாய்த் தானேவிளையாடாநிற்கேன். (சஎ)

தந்தைநானாய்த் தாய்நானாய்த்தனையர்நானாய்த்தமர்நானாய்ச், சிந்தைமகிழ்தாரமுந் தவனுஞ்செப்புதமையன்றம்பியுநானாய், விந்தைபுரிபூடணநானாய் விடுதாதாபொருணானாய், விந்தையுடன்மகிழ்தலுநானாய் மேவிவிளையாடாநிற்கேன். (சஅ)

தோற்றநானாய்த் திதிநானாய்த் துடைத்தனானாய்த் திரோபாவம், ஏற்றமானவனுக்கிரகமிரண்டுநானா யிவையைந்துள், சாற்றலான தொழிலனைத்துந்தகவேயடக்கியன்றமுதல், தேற்றமானசத்தியினாற் றிருந்தவிளையாடாநிற்கேன். (சகூ)



தங்கத்தனந்தவிதமாகித் தானேநிகழும்பணிதியெல்லாம், தங்கத்தினுக்கோர்காலையினுந் தான்வேறாகத் தோன்றாதின், பங்கற்றொளிருமென்னிடத்திற்பலவாய் நிகழும் சகமுழுதும், பங்கற்றொளிரும் யானென்றேபார்த்துவிளையாடாநிற்கேன். (ருய)

சத்தையின்றி யொருபொருளிந்தானே யுண்டாயிருக்குமோ, சித்தையின்றி யொருபொருளுந் தேஜசுண்டாய்விளங்குமோ, மித்தையான சகமுழுதும் விளங்குமதினின்றதினாலே, எத்தைநோக்கி மகிழ்ந்திடினுமியானேயென்றுமியான்மகிழ்கேன். (ருக)

நித்தமாகியேநிற்கி னிகழுங்காலபரிச்சேதம், ஒத்தபரிபூரணமாகிலோதுந்தேசபரிச்சேதம், மத்தமானதேகமேயாகின்வத்துபரிச்சேதஞ், சித்தமாகியிம்மூன்றுஞ் செல்லாவென்னுள் யாமகிழ்கேன். (ருஉ)

சத்தைவேறொன்றிலாமையினாற்சாதிபேதமதுமாயை, சித்தைவிடவேறிலாமையினாற்செப்பும்விசாதிபேதமது, வித்தைதானிர்வயமாகின் வேறுவேறாஞ்சுவகதமும், மித்தையானவென்னிடத்தின்மேவி விளையாடாநிற்கேன். (ருங)

என்னையெனதுகினைவினுவிதுவாய் நானுவாய்க்காண்கேன், என்னையெனதுகினைவிலதினேகமாயதுவாய்க்காண்கேன், என்னையன்றியொருபொருளுமிங்குமங்குமில்லையதனுல, என்னையிங்குமங்குமா யானேகண்டுநான்மகிழ்கேன். (௫௪)

எல்லாநானுயன்றுமுத லிருந்துவிளையாடாகிற்களெல்லாம், வேறென்றெண்ணியேயிருந்துமோகமடைந்தேனை, எல்லாமுடையவருட்சத்தியிரங்கிமோகமறவிச, எல்லாநானுய்ப்பண்டைப்படியிருந்துவிளையாடாகிற்கேன்

இதுவேதுணிவென்றறியாதாரென்று நீந்தாரிடர்க்கடலை, இதுவேதுணிவென்றறிந்தோர்களென்று நீந்தார்சுகக்கடலை, இதுவேவேதமுரைப்பதுவு மீசன்முதலோரனுபவமும், இதுவேதுணிவென்றங்கையினிலெடுப்பேன்மழுவைச்சத்தியமே. (௫௬)

இந்தஞானமகிழ்ச்சியுளோர்க் கியம்புஞானசரிதைப்படி, அந்தவூழேகின்றிடுமற்றவைகளெல்லாமகன்றிடுமால், வந்ததேவர்மானிடர்க்கு மாதர்முதலோர் சங்கமில்லா, அந்தவூழேகின்றிடல்போலா மென்றறைவோர்கற்றுணர்ந்தோர். (௫௭)



குலத்தைபுடையோர் தங்களுக்குக்குலாசாரத்தின்வழிநிற்கும், நலத்தையுடையசமையிகட்கு நவிற்றுநெறியேதானிற்கும், மலத்தையுடைய ஞானிகட்குப்பகரும்படியேதானிற்கும், வலத்தையுடையவூழென்றேவகுத்தேயுரைக்குமுயர்ந்தோரே. (௫௮)

விடையமீதிலுபரதியுமேவுமுயிரமேனனியருளும், அடையுமாசான்மே லன்புமந்தப் பிரமஞானமுமே, தடையேயன்றி யிவைநான்கோர் தனுவா யுடையோர்தமைஞானம், உடையோரென்பரல்லாரையுரைப்பர்சோரஞானியென்றே. (௫௯)

ஆசாரங்களவையில்லா வசடரிடத்தில் விஞ்ஞானம், தேசாய்விளங்காத பரமதுஞ்சிறப்பேயின்றிச் சண்டாளர், மாசாபாண்டந்தனிலுறையும்வான் கங்கையினீரினீனிழிவாம், ஏதாகினும் யோக்கியத்தானத்திருந்தாற்பிரகாசத்தையுறும். (௬௰)

கான்றசோறின் விடையமதைக்கண்டு முனங்கைவிடுத்தொழிந்தே, ஆன்றவாசானடிபரவி யமலவேதநெறிசென்று, தோன்றவனுபூதியிற் பரமசுகத்தையடைந்தோர்பினும்பேய்த்தேர், போன்றவிடையமே விடுமோபொருந்திலவர் ஞானியையொக்கும். (௬௧)

இயமநியமத்துடையரா யெழிலாஞானயோகராய்,
உயர்நற்குருவினருளாலே யோரஞ்ஞான நிவிர்த்தியை
யும், சுயசித்தாந்தவாயையுந்தோன்று மனுபூதியிலடை
ந்தோர், பயனில்விடையந்தனைவிரும்பார் பற்றுயுழலு
மற்றையரே. (௬௨)

மனனசமாதியுடையோர்க்குவகுத்தவியமநியமமு
மில், ஜனனமரணவித்தானதகு நீடிருஞநிவிர்த்தியுமில்,
கனநற்பரமானந்தமதுங்கை கூடாதுதான்வாளா, மன
னமதிதேமகிழ்வெய்திவசனஞ்செயுமுன்படிமயங்கும் ()

அந்தரங்கத்தொருவனையோரரிவை யொருத்திதா
ன்புணரும், அந்தவகையின்வெளியாகுமரிவை வடிவி
லதுபோல, பந்தமறுதத்துவமுணர்தல் பரமாந்தரங்க
மாணலும், தொந்தமகன்றவகைதோன்றுஞ்சொல்லான
டையாற்பாவனையால். (௬௪)

மருளையுடையபித்தனையு மருளில்லாதசுத்தனையு
ம், மருளையிலரேதுணிவாக மதிக்குமதுபோலீதன்றே,
தெருளையுடையஞானியையுந் தெருளில்லாதஞ்ஞானி
யையும், தெருளையுடையோரே துணிவாய்த்தேருமவர்
சொன்னநடையினுமே. (௬௫)



தத்துவங்களெழுநான்குஞ் சாற்றுமாயை தானி
வையின், கொத்துகளைப்பார்த்தறவிசிக் கூறுமூன்றும்
பாழ்கடந்து, தொத்துமற்றொன்றில்லாத சுவையானந்
தப்பூவையையே, அத்துவிதமாத்தினம்புணர்வோரழியு
ம்போகம்வேண்டிடுமோ. (௬௬)

யோகமதனிலுறுபயனையுவர்த்தே ஞானநெறிமே
வி, ஏகமெனும்பிரமபதமெய்தி யாருடம்பிறந்தோர்,
தேகவடிவாயேநின்று சிந்தித்தனுசிந்திக்கிலுள, போக
மதனைமேவிடுமோபொருந்திலூர்ப்பன்றியையொக்கும்

அலைவையிறந்தவிடத்தந்தவானந்தம்மற்றவ் வின்
பம், அலைவையுடைய விடத்தென்றலறியாமையினலெ
ல்லாம், அலைவையுடையவிடத்தென்றி யானந்தஞ்ச
வ்விடத்தும், அலைவையிறந்தபுடத்தன்றி யானந்தஞ்ச
ற்றும்முதியா, தலைவையுடையவிடத்தரந்தையென்றே
யறிஞாலையாரே. (௬௮)

சுணங்கன்றனது ரசமிதென்றே தோன்ற வறியா
தெலும்பின்கண், இணங்கிமகிழுமதின்பமெய்தும் வழி
காணுதென்போல், பிணங்களெல்லாஞ்சுகமென்றேபே
ணிப்போகந்தனைவிரும்பும், குணங்கொள்ஞானியொரு
வனுமே கொள்ளானின்புண்டெனப்போகம். (௬௯)

உள்ளபொருட்கேயின் பென்றுமுளதாமென்றுமி ல்லாத, கள்ளமுடையபோகத்திற் காணுஞ்சுகமேதின் பென்றே, உள்ளமகிழ மசத்தரெலா முணர்ந்தஞானி யொருவனுமே, பொள்ளலுடையபோகத்தைப் பொரு ந்தான் பொய்பாதலினலே. (௭௰)

ஊனதாகிகிற்போற்கே யுலகனென்று பேருடைத் தாம், ஆனவூனிதனக்கறிவானந்தந்தோன்றுமோவஃதி ன், ஞானமாகிகிற்போர்க்கே ஞானியென்றுபேருடைத் தாம் ஆனஞானிதனக்கிந்தவகிலவின்பந்தோன்றாதே.

ஏகதேசதேகமதாயிருந்தேயறிவானந்தமதை, ஏக போகஞ்செயக்கூடாததுபோற்சொரூபஞானிக்கும், ஏ கதேசவின்பத்தையெங்கும்பூர்ணமாயிருந்தே, ஏகபோ கஞ்செயக்கூடா தினமுடையோரகூடுமென்பார். (௭௨)

எங்கெங்கிருந்தெய்திமின்பமெழில்விட்டின்பமெ ணவேகண், டங்கங்கருத்து வாமென்னிலறிஞர்கூறுமு றையன்றே, இங்கங்கென்றில்லாவின்பமெய்தினேர் கட் கொருநாளும், இங்கங்கென்றேதோன்றிடுமோவென்று மபுணரமியல்பானல். (௭௩)

பங்கேதோன்றுமில்லாதபரமாயெங்கு நிற்கினுமு ன், இங்கேயின்றவாதனைகளிருக்குமெனின் முன்சாதக த்தில், தங்கேதோன்றுமில்லாமற் சரித்ததாகிலதேகிற் கும், இங்கேயுறைந்தபாண்டத்திலிலுப்பைப்பூவின்மண முண்டோ. (௭௪)

இயமகியமமியற்றும லெழிலார்கிட்டையடைவோ ரக்குச், சுயநற்சொரூபாநந்தமதுந்தோன்றுதிருளுமாறு து, பயந்தபரமமடைந்தவர்போற் பாவித்துளத்திற்பினு மிந்தக், கயவர்க்குரித்தாம்போகத்தைக் கருதியிருந்துந் துடர்ச்சியென்பார். (௭௫)

தனதென்றுரைக்கு மவையெல்லாந் தள்ளியினி மேற்றனதென்னக், கனவவ்வறிவுதானகக் கண்டானந் தமடைந்தோர்க்கு, மனதில்வருந்துமவையெல்லாம் வ ந்துவருத்தாதுடவினையே, தினமுமவருத்தி விடப்படா ச்செய்கையதுவேவாதனையாம். (௭௬)

உடந்தையான வுடன்முதலே யுயிர்க்குவேறுகூறு க்கிக், கடந்தசிவமேதானகக்கண்டு தெளிந்தோர்க்குட ன்முன்னத், துடர்ந்தபோகங்கலங்கிவிடுந்துடர்ந்தேகிற் கிற்றேறின நில், கடைசததயிருங்கடையாதகட்டித்தயி ருந்தோன்றிடுமே. (௭௭)

ஆகுவுறையுங்கட்டியிதென்றறிப்போமோவெனி லந்த, ஆகுவுறைதற்கா னதிலே யைபந்தோன்று மதா

போல, ஆகுமொழியையுடையோர் கணையந்தோன்று ஞானமதற், காகும்விடையமுடையோர் கணையந்தோன்றுதுணர்ந்தோர்க்கே. (எஅ)

அகத்திலுளதேபுறத்துண்டாமகத்தில்லாதேபுறத்தில்லை, சகத்திலுள்ளோரோதிடுமித்தகைமையென்றுமதுபோலத், தகர்த்திவ்விடையமனுபவமாய்த் தனையே கண்டோர்புறத்துறினும், தகர்த்தபடியே நின்றுவிடுஞ் சாராதிதையத்துளபடியே. (எகூ)

போடவேண்டும்புடமெல்லாம் போட்டுத்தங்கமாகினதில், கேடதானகளிம்பென்றுங்கிட்டாஃதினியதிபணிச், சேடமானசிவமாகித் தினமுமதுவாய் நின்றிடுவோர்க், கீடதானமாயையென்று மிலதேயாகிப்போய்விடுமால். (அ௦)

உளகத்துள வெப்பொருள்களையு முளலக்கணங்கொண்டிகுதிதென்,றிலகக்குணிக்கலாமஃதினில்லாமாயையில்லெனவே, விலகியிதனுக்கதிட்டான மெய்யாம்பிரமமானேரைக், குலவுமுணர்வுசரிதைகொண்டே குணிக்குமாயையொழிந்தோரே. (அக)

பிணிகளொழுங்கிலாயுமற்றைப் பேசுந்தெய்விகத்தாயும், தணியிலுடையிற்சுகப்பிறந்துதணிந்துதோன்று



மதுபோல, எணியவெணியாங்கெவ்விதத்து மெய்திமகிழ்ந்தோாதமதறிவில், கணமதேனும்விடையமதிற் கலங்காதறிவாய்த் தணிந்திருக்கும். (அஉ)

ஒறியிற்கதிரோன் சாளரத்திலிருந்துதோன்றும் சூதவனு, அறவிட்டெறியும்பேரொளியி லஃதுதோன்றுததுபோல, அறிவிற்றோன்றுமுலகெனினு மகண்டாகாரவறிவதனில், செறியத்தோன்றுச் சிற்றறிவிற்செகம்போல் விளங்கியிடுமென்றே. (அங)

தரையுளோர்கண்மிகவருந்தித் தரினுமுடையூணிவையன்றிப், புரையிலோர் கண்மற்றொன்றைப் பொருந்தநினையாரென்போலும், வரைவிலோர்கண்மிகவருந்தி வாங்கிப்பொருந்திமயங்கியிடும், கரையில் கருமந்தன்னலேகைவிட்டொழிந்தஞானிகளே. (அச)

உடலைக்குறித்தோபாலருந்த லூரைக்குறித்தோ நாட்டம்பிறவவரவர்க்கே, நடலையுலகையொழிந்தந்த நாட்டம்பிறந்தவ்வானந்தக், கடலையமிழ்ந்தவெனிலந்தக்கடலிலமிழ்ந்துமன்னோரைக், கடலைமனடைக்கொண்டோரைக்காணுமதுபோற்றோன்றிடுமே. (அரு)

கனியும்பாலுஞ்சருக்கரையுங்கலந்தவன்ன நிரமபவே, அனிசம்புசிப்போர்நீர்க்கூழையருந்தநினைக்குமோ

வஃதின், இனியகுருவினருளாலே யிருளுநீங்கியானந்தம், நனியுமுடையோர் விடையமதைநணிகார் நணுகினைக்கிடமே. (௮௬)

ஞானமுடையோர்க்கேதுறினுநணுகாகுற்றமெனத்துறவோர், ஊனமனையோருரைத்திடின்மற்றென்றே குற்றமனையுடையோர்க், கீனமுடையதுறவியர்க்கேயிரண்டாங்குற்றம்பரப் பிரட்டும், ஆனதுறவி லிழிவுமெனளறையுமகன்றபெரியோரே. (௮௭)

அபரஞானமுயர்குருவா யந்திரிவுமறக்கேட்டு, விபரமாகவந்நெறியின்மேவிப் பூதமாத்திரமே; சபலமாக நீங்கிடத்திற்சகத்திலொன்றும்வேண்டாது, கபடஞானமுடையோரேகண்டோமெனும்போகத்துமுறும். (௮௮)

அந்தமுகத்தின்புறுவோர்க ளழியும்போகமின்பென்றே, இந்தமுகத்திற்றிரும்பார்களென்றுமீனஞானியர்கள், அந்தமுகத்தின்புற்றோரினறையுஞ்சொன்மாத்திரமாகி, இந்தமுகத்திப் போகமதையின் பென்றழுந்துமெப்போதும். (௮௯)

போகத்துறைவோன் றன்மனையைப் பொருந்திப்பிறர்க்கீந்திடுவதுண்டோ, ஏகத்துறைவோன்றன்மனையையிதையமொருத்துப் பிறர்தமக்குச், சோகத்திறனும்



போகத்தைச் சுகமென்றியுமோவியின், மோகத்துறைவோறகன்றோர்கண் மொழிவரவரைப்பதிதரென்றே. ()

இடைமுன்னீறிலாண்டபரத்தேசுமாகியானந்தம், உடையவறிஞர்தமக்கிச்சா வூழேசற்றுமிலவாகும், விடையமதனில்விருப்பமாய் மேவியூழுழென்றிடுவர், கடையிலியமதூதர்களாற் கலங்கியூழுழென்றிடுவர். (௯௧)

இதுவேநான்குசாதனமு மியல்பாயுடையோரெய்துநெறி, இதுவேயென்று மாறாதவிருளின்றி மிரைத்தானறுக்கும், இதுவேஞானந்தரசம் ரமிக்கச்செய்யும்விஞ்ஞானம், இதுவேயுனக்குமுறுதியென விசைத்தாளனையாளருளுண்மையே. (௯௨)

இந்தநெறியில் விகங்கமதையெய்தியானு மவளருளால், பந்தமகன்றுபரவொளியைப் பார்த்தேனனைத்துந்தானாகி, அந்தநடுமுன்மூன்றுமில்ல வகண்டாகாரவடிவாகித், தொந்தமென்றுமியிதாகிச் சுயமாய்விளங்கியிருந்ததுவே. (௯௩)

வேறு.

நிமலமாம்பிரமவனுபவமுரைக்கே னின்றதுசிருட்டிமுன்னுறைப், நிமலமாமென துநிலையினின்றேனினைவெ

னுமாயையிற்பாய்ந்து, நிமலமாம்பரமா யுயிர்களாயுலகா
ய்நிலையதுபோலவே விரிந்து, நிமலமா மென்கணப்படி
யொடுக்கிநின்றிடிவேனிதுநிசமே. (௬௪)

அலைவில் சிற்சொரூபமஃதுமல்லாதா யதைவிட
வேறுமல்லாதாய், அலைவுசெய்யஞ்ஞானத்திசைசத்தா
யஃதகன்றிடும்பொழுதசத்தாய், அலைவின்றித் தேறின்
மூக்காலுமில்லாதாயனுதியாயனிர்வசனமதாய், அலைவு
அமாயையுடையமாயாவியானனுகியசோகம். (௬௫)

பரசொருபத்துர்கபினமும் பினமும்பகர்பினுமின்
னமுமலதாய், நிரவயமலதாய்ச் சாவயமலதாய்நிரவய
சாவயமலதாய்த், திரசத்தையசத்தைச் சதசத்தையல
தாய்ச்செப்பியவனிர்வ்சனமதாய்ப், பாபிரகிருதிதமசெ
னுமகிமைபண்டையிலுடையவிச்சோகம். (௬௬)

எனைமறைப்பறைச்சிதீண்டியுமகத்தி விருளிறந்து
ம்மொளிபிறந்தும், பினைநனிமாயைபதூரத்தியாயிம் பிர
வஞ்சமருந்தியுமிவையின், உனிநின்றுபார்க்கிற் பஞ்சகு
தகமுமுண்டெனக்கேயிவைதிரா, துனிநின்றுபார்க்கினி
வைகட்காளானெனுருவிருந்தாசலமடைந்தே. (௬௭)

என்னையே தோன்றுவகை கொலைபுரிந்து மினிய
தோர்ஞானமாணிக்கம், தன்னையேகளவுபுரிந்து பற்றத



ன்மேற் றவிர்ந்திடாமயக்கத்தைக்கொண்டும், பின்னையு
மதிலேகாமத்தைப்பெற்றும் பேச்சிறந்ததுவெனவுரைத்
தும், இன்னவைம்பாதகங்கட் காளானே னெழில்விருந்
தாசலமடைந்தே. (௬௮)

இத்தகைசூதங்கள் பாதங்களெய்தியு மிடமுதற்ப
ற்றும், ஒத்தவிவ்வுடலிந்தியங்கரணங்களொன்றுந் தாக்
கறவெட்டவெளியில், வைத்தெனக்கண்டபோழ் செய்த
தந்தோமலையையேநம்பியுமுலகில், இத்தனை கொடுமை
யுடையவித்தலந்தா னெனக்கென்றே யிருந்ததோ வறி
யேன். (௬௯)

வேறு.

விருத்தகிரிவடிவான விறையவனும்வாழ்க, வினை
யனேற்கருள்விருத்தவம்பிகையும்வாழ்கக், கருத்திலுற
வெனக்கருளும்பிரணவமும்வாழ்கக், காரணியையடை
யுமடியாருநனிவாழ்கத், திருத்தமுன்றலமுமிகச் சிறப்ப
தாய்வாழ்கச், சேர்ந்துறையு மியாவர்களுஞ் செல்வமு
டன்வாழ்க, இருத்தியெனையுமையருள யானுணர்ந்தப
டியே, எல்லோருமுணர்ந்துவாடுதலறவேவாழ்க. (௱)

விஞ்ஞானசாரம்- முற்றிற்று.



உ

திருச்சிற்றம்பலம்.

நான்காவது,

# அத்துவிதவுண்மை.

காப்பு.

## பாயிரம்.

ஆழத்துப்பிள்ளையார் துதி.

பொங்கரவதுவுமிந்தும் புரிசடையதனிற்சேர்த்தி *
அங்கரந்தனிலிடத்தி லழகியமானையேந்தும். *
சங்கரன்சேயெம்பாசந்தகர்த்தைந்துமொருங்கருக்க *
ஐங்கரங்கொண்டவாழத்தையனை வணக்கஞ்செய்வாம் *

பெரியநாயகியார் துதி.

ஆண்டகுருவேகண்மணியேயருளேநானென்றாகப்
பூண்டவடிவையென்னுடையபுத்தியதனுணின்றுணர்த்தி
ஈண்டப்படியேயென்னுளிருந்து முரைக்கவேண்டிடுநீ
நீண்டமாலுமயன்போற்றுநிமலவிருத்தநாயகியே. *

பாயிரமுற்றும்.



நூல்.

மேலாஞ்சதுட்டசாதனங்கண்மேவி நிறைந்தபோ
க்குரைக்கின், மேலாமதுநாமெனத்திடமாய்விளங்கு ம
வையில்லாதவர்க்கு, மேலாம்பரமன் மான்மமூவாய் வி
ளங்கியுரைத்தும் விளங்காது, மேலாஞ்சாதனங்கள் வர
மேவவேண்டுஞ் சாதுசங்கம். (௧)

உண்டாய்த்தோன்றிரமித்திடுதலொரு நம்வடிவே
யுருநாமம், கண்டேயிடன்மாத்திரமல்லாற் கருதிப்பார்
க்கின்வேறில்லை, பண்டேமுதலித்தகவாகும் பலவாய்க்
காணன்மைத்திரிவால், விண்டாற்றிரிவை யேகமாய்வி
ளங்குநமதுவடிவமே. (௨)

எந்தச்சத்திலசத்தாகு மிந்தவுலகுசத்தாகும்
எந்தச்சித்திலசித்தாகுமிந்தவுலகந்தான்விளங்கும்
எந்தவின்பிற்றுன்பாகு மிந்தவுலகமின்பாகும்
அந்தச்சச்சிதானந்தமதுவேநமதுவடிவாகும். (௩)

எல்லாநாமே யெனவறிந்தா லெஃதைநினைவா னி
னைத்திடுதல், சொல்லாலெஃதையுரைத்திடுதற்றொழிலா
லெஃதைச்செய்திடுதல், இல்லாவுலகைவேறெனவே நி
னைதலுரைத்தற்றொழில்புரிதல், நல்லாரனைத்து நாமென
வேநாடாரவ்வினொன்றையுமே. (௪)

நானாவாகத்தோன்றியிடுநாமரூபமிவையனைத்தும், நானாவல்லவொருநாமே நாடிமகிழுஞ்சித்திரங்கள், தானாஞ்சித்தாகாசத்திற்றன்னைத்தானே தான்றானே, தானாங்கருவியினில்வரைந்துதானேநோக்கிமகிழ்ந்திடுதல் (௫)

தங்கந்தானேபணிதியாய்ச் சாற்றும்விதமாய்விளங்குதலின், அங்கமுதலாஞ்சகங்களாயறிவே விளங்குமயலில்லை, இங்கங்கென்றேபங்கொன்றுமில்லையகண்டவறிவொன்றே, துங்கவறிவுதோன்றளவுந்தோன்றுநானாவிதரூபம். (௬)

இன்னானன்னானிதுவதுவென் றியம்புமுலகம் வேறன்று, தன்னானந்தலீலையினாற்றன்னைத்தானே தன்னிடத்தில், அன்னானின்னானதுவிதுவென்றனந்தவிதமாய்த்தான்பகுத்தே, உன்னாநின்று தானடிக்குமொரு கூத்தெனவேயியம்புவரால். (௭)

தங்கமொன்றேபணிதிகளிற் சாற்றும்விதங்கள்வெவ்வேறு, தங்கவிலக்கணமுமன்று தங்கம்விடவும் வேறன்று, தங்கமழியாய்ப்பணியழியிற் சாற்றுமிந்தத்தகமைபோல், எங்குநிறைசித்தாநம்மிலிலகுமிந்தவுலகமே. (௮)

தானுண்டாகிலுலகுண்டாந் தானுண்டாகிலுயிருண்டாம், தானுண்டாகிற்பரமுண்டாந் தானுண்டாகில்வீடுண்டாம், தானுண்டாகிற் பஞ்சதொழிற்றானுண்டா



குந்தனையன்றித், தானுண்டோமற்றவையதனாற்றானேயனைத்தும்வேறில்லை. (௯)

மந்தவிருளிற்கயிற்றரவின் மாறுபாடாய்த் தோன்றுதல்போல், இந்தவுலகு முயிர்களு மவ்வீசன்றானுமுயிரடையும், பந்தம்வீடுமீசன்செய்பஞ்சகிருத்தியங்களுமே, அந்தநமதுசொரூபத்திலாரோபிதமாய்நின்றிலகும்.

அனந்தவிதமாய் கீற்றையிடைத்தாகுஞ்சிலையொன்றதைப்பார்க்கின், அனந்தவிதமாய்த்தோன்றியிடுமந்தக்கீற்றுஞ்சிலையொன்றே, அனந்தமுடைய நம்மிடத்திலகிலமந்தத்தகமைபோல், அனந்தவிதமாய்த் தோன்றியிடுமறிவேயன்றிவேறில்லை. (௧௧)

மையேமிகுநித்திரைமோகமாமயக்கிற் கனவைக்கனவதனில், பொய்யேயெனத்தோன்றாதவர்க்கே புகலவேண்டுமெனவுணர்ந்தோர், மெய்போலத்தோன்றி நனிவிளங்குஞ்சகஞ்சற்குருவன்றிப், பொய்யேயெனத் திட்டமதாகப் பொருந்தத்தொன்றாதொருக்காலும். (௧௨)

கனவினனவேயுணர்ந்துயர்ந்தோர் கனவென்றொருவற்குரைத்திடினும், கனவிதெனவேகாணாது காணுந்தனக்கென்றறிவுதிக்கின், வினவிலதுபோ னனவையுந்தம்விகற்பமெனவே யுரைத்திடினும், நினைவினிசமாய்க்கொள்ளாது நிசமாந்தனக்கென்றறிவுதிக்கில். (௧௩)

கனவைக்கனவென் றுணர்ந்தவனைக் கனவினீயா
ரெனவொருவன், வினவிலவனுநனவதனில் விளங்குந்
தனையெயுரைப்பனதில், நனவை நினைவென்றுணர்ந்தவ
னைநனவினீயாரெனவொருவன், வினவிலவனுமகண்ட
மதாய்விளங்கும் பிரமமேயென்பன். (௧௪)

நனவிற்றுஞ்ஞேரிடத்திருக்க நவினித்திரையின்மோ
கத்தால், கனவிற்றேசாந்தரமுதலாய்க் காணுமனேகவி
தமஃதின், வினவினுமுமகண்டமதாய்விளங்கி யசையா
திருந்திடவே, கனவிம்மாயையதனில் விதமாய்க்காணுந்
தேசாந்தரமுதலாய். (௧௫)

கனவிறறோன்றும் பொருளெல்லாங் கனவிற்கன
வென்றுணர்ந்தக்கால், நனவில்விவகாரந் தோன்றுநவிற்
றுமிந்தத்தகமைபோல், நனவிற்றோன்றுஞ் சகமனைத்து
நமதுசங்கற்பம்மெனவே, நனவிற் றோன்றியிடுங்காலை
மதுசொரூபந்தோன்றியிடும். (௧௬)

மனத்திற்கனவிற்கனவெனவே மதிக்கினந்த விவ
காரத், தனத்தமுறினுங்கலக்கமுறு னதிகமுறினுமகிழ்
ச்சியுறுன், மனத்தினனவில் விவகாரமயங்கி நீங்காதிரு
ப்பனதின், கனத்தசகஞ்சங்கற்பயெனக்கண்டாற் றனை
நீங்காதிருப்பார். (௧௭)



சிங்காதனத்தில்விற்றிருக்குஞ் சிறப்பாராசுங்கன
வடைந்து, மங்காய்ப்புலைத்தன்மையை மேவி வருந்து
வோன்றனனவுணரின், அங்காஞ்சோகமோகமெலா மந்
தக்கணமேநீங்குமதின், இங்காஞ்சீவத்துவமோக மிரியுந்
தனைத்தேர்ந்தக்கணமே. (௧௮)

கனவைக்கனவென்றுணர்ந்தக் கனவினனவை
நோக்கிடினக், கனவையொழிந்த வக்கணமே காணுநன
வில்விழிக்குமதின், நனவைச்சங்கற்பமென்றுணர்ந்து ந
னவிற்றனையேநோக்கியிடின், நனவையொழிந்துவக்கண
மேநமதுசொரூபத்தேவிழிக்கும். (௧௯)

கனவையொழிந்துநனவதனைக்கண்டார் நனவினி
ன்றுபினக்கனக், கனவைநோக்கியிடின்முன்னங்கண்ட
படியேதோன்றுமதின், நனவையொழிந்து தன்சொருப
நன்றுபுணர்ந்தோ ரதினின்று, நனவைநோக்கி நினைவு
கொடுநாடின் முனம்போற்றோன்றிவிடும். (௨௰)

உறக்கமோகமதிற் கனவிலுலகமுயிர்கள் விவகார
ம், சிறக்குமெய்போற்றோன்றியதைத்தேரிற் பொய்யா
விடுமஃதின், மறக்குமாயாமோகமதின் மாசார்பந்தம்வீ
டதென்ப், பிறக்குமவைகடனைத்தேரிற்பேசும் பொய்
யாய்ப்போய்விடுமோல். (௨௧)

ஒருவனுளதாகையிற்கனவுமுண்டா முறக்கமோக
மதின், ஒருவனிலதாகையிற்கனவுமொருகாலையினுமில
தாகும், சொரூபநமதுண்டாகையினாற்றோன்று நானாவி
தஞ்சகநம், சொரூபமிலதேலிலையதனாற்றோன்றுமனைத்
துஞ்சொரூபமே. (௨௨)

படிகத்தடுத்தநிறங்களதிற் பத்திபாயுமந்நிறமாய்ப்,
படிகமாகிநீங்கினதிற்பகருமிந்தத்தகமைபோன், முடிவி
னமதுசொரூபத்தின்மோகஞ்செயுமாயையிற்றோன்றும்
முடிவில்பந்தம்விடதுமின்மொழியமாயையென்பதும்

பழுதையதனிற்றோன்றியிடும் பாம்பை யுள்ளபடி
நோக்கில், பழுதையாயேதோன்றியிடும் பாம்புமதுவாய்
விடுமஃதிந், பழுதில்சிவத்திற்றோன்றியிடும் பன்மையுல
கைநோக்கியிடின், பழுதில்சிவமேயாய்த்தோன்றும்பன்
மையுலகுமதுவாய்ப்போம். (௨௪)

தோன்றிவிளங்கும்பொருளெல்லாந்தொல் வேதா
ந்தவிசாரணையில், ஊன்றிநோக்கியனுதினமும் யூகமத
னிற்பரிசயித்தால், தோன்றிவிளங்குமறிவொன்றேசொ
ன்மாத்திரமாய்விடுமுலகம், ஊன்றிநோக்காதவர்கட்கே
யுளதுபோலத்தோன்றியிடும். (௨௫)



ஏகமாகி நின்மலமாயிருக்கு நமக்கிப்பந்தமெனும்,
மோகம்வந்ததேதென்று முன்பின்பாராதிப்பந்தம், போ
கவழியேதெனநாடிப் பொருந்தும் வேதவிசாரணையால்,
யூகமதனிற்சிலைதக்கினதினுள்ள வியல்புபின்றோன்றும்.

பரவைதானேபோரலையிற் பலவாய்விளங்குமோர
லையில், பரவைநீங்கியொன்றாகிப்பழையபடியேவிளங்கு
மதின், பரவுஞ்சொரூபஞ் சங்கற்பப்பகுதியதனிற் பல
வாகிப், பரவுமசங்கற்பத்தொன்றாய்ப் பழையபடியேவி
ளங்கியிடும். (௨௭)

கடங்கடமதுகாரணத்தைக்காட்டிடாது முன்விள
ங்கும், படங்கடானு மப்படியே பகர்காரணமு நீங்காது,
சடங்களாகுமிச்சகமுந் தான்முன்விளங்குங் காரணமா
ம், இடங்கொள்சொரூபத்தையுங்காட்டாதிருக்குமதை
விட்டகலாதே. (௨௮)

மரத்தைநோக்கின்மதகரியுமறைந்துவிளங்குமதை
நோக்கின், மரத்தைமறைத்துத் தான்விளங்கும்வாறு
போலச் சகமுழுதும், பரத்தைநோக்கினதின் மறைந்து
பரமாய்விளங்குஞ்சகநோக்கில், பரத்தைமறைத்துத்தா
ன் விளங்கும்பரமே யனைத்துமாதலினால். (௨௯)

நாகந்துதிக்கைதனைநோக்கி னாசிகரமுந்தோன்றியி
டும், நாகநயனந்தனைநோக்கி னயனஞ்செவியுந்தோன்றி
யிடும், ஏககருவிபார்த்தபடி யிரண்டுவிதமும் விளங்கும
தின், ஏகபரமும்பார்த்தபடியிலகுமுலகுஞ்சித்ததுமாய்.

ஊனாம்போகமெமதென்றே யுன்னல் விசாரமிலா
மையினால், நீநானவைகளிவைகளெனநிலைபோல் விளங்
கியிடுமிந்த, நானாவிதமாஞ்சகமுழுது நாமேயன்றிவேறி
ல்லைத், தானாய்நோக்கிற்றானாகுஞ் சகமாய்நோக்கிற் சக
மாகும். (௯௧)

மாயையெனு மில்வுரைக்கருத்தமதிக்கின் யாதொ
ன்றிலாததுவே, மாயையெனவிப்படியிருக்கமதிபரதனை
யிருவகையாய், மாயைமெய்யென்றுணாத்திடுவர் மயக்
கப்பட்டுத்தனைமறந்தோர், மாயைபொய்யென்றுணாத்தி
டுவர்மயக்கநீங்கித் தனையறிந்தோர். (௯௨)

நாமரூபந்தனைநோக்கி நாடன்மனமும்புறமுகமும்,
நாமரூபந்தனைநீக்கி நாடலறிவு முண்முகமும், நாமரூப
த்தெவ்வளவு நாட்டஞ்சொரூபந்தோன்றாது, நாமரூப
நாட்டம்விடி னமதுசொரூபந் தோன்றியிடும். (௯௩)

அரையகுமாரன்புலையருடனணுகிமறந்து மொரு
வரால், அரையகுமாரனெனவறியி லஃதெப்போதுமறி



வாதின், தரையிலாசானெழுந்தருளித்தனைப்பார்த்தது
நீயெனவுரைக்கின், புரையிலதுவாமூவவத்தைபொருந்
தும்பொழுதுமறவானால். (௯௪)

படியிற்பொருளின் மெய்யென்றுபடிறென் றிந்த
விருவகையும், முடிவின்மெய்பொய் யறுந்திடலா மொ
ழிபுமிந்தத்தகைமைபோல், கொடியவுலகைமெய்யென
வேகூறுமதையுமறிந்திடலாம், முடிவிற் சகம்பொய்யே
யாகு முத்தியொன்றேமெய்யாகும். (௯௫)

அகிலந்தோன்றும்பொழுது மறைந் ததிட்டானம
மாய்விளங்கியிடும், அகிலநீங்கிற்றான்விளங்கு மந்தச்சச்
சிதானந்தம், அகிலந் தோன்றும்பொழுது மறைந்தது
தோன்றுதல்போலதுதோன்றில், அகிலந்தோன்றாதத
னின்மறைந்ததனாலகிலமசத்தாமே. (௯௬)

முத்தியாதோவெனவெண்ணி முயக்கவேண்டாமி
ஃதறுதி, முத்தியுளதேற்பந்தமுண்டா முத்தியொருகா
லையுமில்லை, முத்திதானாஞ் சகம்வேறின் மோகமதிற்கா
ண்பதைப்போக்கின், முத்தியாகுமிந்நிலையை முயன்று
வருந்திநிலைகொள்வாய். (௯௭)

இல்லாமாயைதங்கணிலையாருநிற்கவம்மம்ம, பொ
ல்லாப்பிறப்பிற் பட்டதுமாய்ப் பொக்கமிகவுந் தவிர்த்

துமாய், நல்லாரிணக்கஞ் சேர்ந்ததுமாய் ஞானவிசார
முதித்ததுமாய், எல்லாமாம்வீடடைந்ததுமா யார்க்குங்
காட்டிமறைந்திடுமே. (௩௮)

எல்லாநீங்கிச்சற்குருவை யெங்குந்தேடி யடைந்த
ருளி, நல்லாருணருஞான நூனவின்று விசாரஞ் செய்வ
துவும், பொல்லாமனத்தையொடுக்கி நிட்டைபொருந்தி
நோக்கல்லாநோக்கும், இல்லாமாயைதனைத் துணிவாயி
ல்லையெனவேகாண்குதற்கே. (௩௯)

விளங்குஞ்சகங்களனைத்தினிலும் விளங்குநாமாதி
கணீங்கி, விளங்குமதைமாத்திரநோக்கில் விளங்கும்பிர
மமக்கணமே, விளங்குநாமாதிகளுமதாய் விளங்கும்வே
றாய்விளங்காது, விளங்குமிந்தநிலை யெவர்க்கும் விளங்
கும்விரோதமதாயே. (௪௰)

நாமரூபம்விளக்கல்பரம் நாடலுயிராமவைமாயை,
நாமரூபந்தனைநோக்கி நாடச்செய்தலஞ்ஞானம், நாம
ரூபத்திவ்வளவு நாட்டமெனவேசெய்தல்வினை, நாமரூ
பந்தனைநோக்கி நாடுமிடத்திலிவைநிகழும். (௪௧)

உருவநாமநோக்கிடத்தி லுளதாமிந்தைவைவகை
யும், உருவநாமநீக்கிடத்தி லொன்றுமிவைகளிலவாகிச்,
சொரூபமொன்றே நிகழ்கலினாற் சொன்னவிவைகளை



வகையும், சொரூபமன்றிவேறில்லை தோன்றும்விவகார
த்திசையில். (௪௨)

விவகாரத்திற்பகுப்புகளாய்விரியும் பரமார்த்தம்ம
தனில், சிவகாரமதாய்விளங்கியிடுஞ் சிவமேயனைத்துமா
தலினால், பவகாரியத்தையுடையோர்க்குப் பகுப்பேயெ
ன்றுந்தோன்றியிடும், பவகாரியத்தையொழிந்தோர்க்கு
ப்பகுப்பொன்றின்றிச் சிவந்தோன்றும். (௪௩)

பந்தத்திசையிற்பலவென்றும் பரமார்த்தத்திலொ
ன்றென்றும், இந்தச்சடங்குசொரூபத்தி லென்றுமில்லை
நோக்கியிடின், எந்தக்காலு மொருபடித்தா யிலங்குஞ்
சொரூபமிவைமாயா, தொந்தத்ததனிற் றோன்றியிடுஞ்
சொரூபத்தாரோபிதமாகும். (௪௪)

மித்தியவாதிவேதாந்திவிளங்குஞ் சைவசித்தாந்தி,
சத்தியவாதியிருவர்களுஞ் சாற்றுந் தங்கட்கடுக்காதை,
மித்தியவாதிசகத்தினுக்கு விளம்புஞ் சிருட்டிமுடிவினி
ன்றும், சத்தியவாதிசிவமொழிந்து சற்றும்வேறில்லென
வுரைக்கும். (௪௫)

சகமதென்பதிலை யெங்குந்தானேநின்று விளங்கியி
டும், சகமதெனவேதோன்றிடுதல் தமது சங்கற்பம்மத
னில், அகமதனிலேகண்டுணராதவையிற்சிக்கிப்பந்தமு

றும், அகமதனிலேகண்டகற்றிலட்போ பண்டைப்படி நிகழும். (௪௭)

பந்தமின்றிவீடின்றிப் பரமேயெங்கும்விளங்கிடவும், பந்தம்வீடென்றெனவுரைத்தல்பார்க்கின்மாயாமோகமதில், சிந்தைவிரிவேபந்தமதாஞ் சிந்தையொடுக்கமே வீடாம்,இந்தவகையாம்பந்தம்வீடியம்புமபவாதவதாகும்

தோன்றிநிகழுமுலகெல்லாஞ் சொரூபமேமற்றுருநாமம், தோன்றிநிகழ்தன்மாயையே சொரூபம்விடவும் வேறன்று, தோன்றிநிகழு முருநாமஞ் சொரூபம்விட வேறெனவுன்னி, தோன்றிநிகழ்தல் பந்தமதாஞ்சொரூபமெனவேயுனல்வீடாம். (௪௮)

உருவநாமமவைக் கிருப்புமுகிப்புஞ் சொரூபத்தினையன்றி, உருவநாமமவைதனக்கே யொருகாலேயினுமிலதாகும், உருவநாமமவைநோக்க லொருவிநமையே நோக்கியிடின், உருவநாமநிகழ்ந்திடாதொரு நம்வடிவாயேநிகழும். (௪௯)

பந்தமென்றும் வீடென்றும் பயிலுகினைவேபந்தமதாம், பந்தமெங்காம்வீடெங்காம் பரத்தைவிடவேறிலாமையினுல், தந்தஞ்சங்கற்பந்தனிலே தாமேமோகித்திடு



முயிர்கள், தந்தமசங்கற்பந் தனிலே தாமே நீங்கியிடு மோகம். (௫௰)

உருவநாமந்தனைநோக்கி லொருதன்னிலைநீங்கினதாம், உருவநாமந்தனைநீக்கி லொருதன்னிலையே நின்றுவாம், உருவநாமமவையிரண்டுமொரு தன்வடிவேயெனக்காணில், உருவநாமந்தானேயாயொளிருமதுவே முத்தியுமாம். (௫௧)

கொள்ளுநெறியேதேதுபந்தங் கூடுமேவீடேதென வேண்டாம், உள்ளும்புறம்புமெனு மிவையிலுதவுமெஃதுதனக்கதனின், றெள்ளுஞ்சங்கற்பங்களெல்லா மிரிய நோக்கிநின்றதன்னை, உள்ளும்புறம்புமின்றியெங்குமொளியாய்க்காணலாகியிடும். (௫௨)

ஒளியேயெங்கும்விளங்கிடுமெவ்வொளியில்விளங்குமுலகெல்லாம், ஒளியேயன்றிவேறுமோவொளியை யறியாருலகென்பர், ஒளியேயன்றியுலகுதனக்கொருகாரணமுமில்லையதனுல், ஒளியேயனைத்துந்திரைநுரைகளுவரியலதுவேறுமோ. (௫௩)

மாயை வேறென்றெனவுன்னி மதிக்கவேண்டாம் பேதவதி, மாயையாகுமற்றஃதைவருந்தி முயன்றுபோர்த்திடுக, மாயைநீங்கு மிந்தமதிவந்தவழியேதெனவேண்

டாம், மாயைநெறியிலம்மதியை வதைக்கிலதுவந்தது தோன்றும். (௫௪)

விளங்கியிடுமிவ்வுலகெல்லா மித்தைவடிவேயென்பதுவும், விளங்கியெங்குந்தற்சொரூப விமலவடிவேயென்பதுவும், விளங்கிலருத்தமொன்றேயாம் வேறாய்க்காணுமஃதகற்றி, விளங்குமொளியாயேகாண்கில்விளங்குமருத்தமொன்றாயே. (௫௫)

தனதுசங்கற்பந்தனிலே சகங்களாகி விளங்கியிடும், தனதசங்கற்பந்தனிலே சகம்போயொடுங்குமதனாலே, தனதுவடிவேசகங்களெல்லாந் தன்னைவிடவேறிலைத்தங்கம், தனதுவடிவைவிடப்பணிகடான்வேறாகிவிளங்கிடுமோ

நிலைமைநீங்கிற்சகமுதித்து நிசமுமாகுமற்றவையின், நிலைமைஞான விசாரணையி னிசம்போயொடுங்குந்தோற்றரவு, நிலைமையாகுந்தனைநோக்கி னீங்கிமறையுமிச்சகத்தின், நிலைமையொருவேதுவிலுதிக்கு நீங்குமிருமையேதுவினில். (௫௭)

எல்லா நாமெப்படி யாவோ மென்னவேண்டா மிலக்கணம்பார்த், தெல்லா நோக்கியிடுமிடத்தி லிருப்புந்தோற்றரவுமின்பும், எல்லாவிடத்துமுண்டாகு மியல்பு



மவையே பிறிந்திட்டால், எல்லா மெங்கே தோன்றிடுமோவிதனாலெல்லாநாமாகும். (௫௮)

வெள்ளிவிகற்பமதிற்கிளிஞ்சில் விளங்குப்விகற்பந்தனை நீக்கித், தள்ளின்வெள்ளியென்பதுபோய்த்தானே விளங்குமக்கிளிஞ்சில், வெள்ளியென்றபொழுதுமலவிகற்பவென்றபொழுதுமது, வெள்ளியாகிநீங்கினதில்மலத்ததுபோன் மாயையுமே. (௫௯)

ஒன்றேயென்னின்முத்தியில்லையொருவன்வேறேயுண்டென்னில், ஒன்றேயாகமாட்டா மற்றொன்றுமென்னி லென்றுகெடும், ஒன்றேயென்றவாதிகட்குமோதுமிரண்டேயென்றவர்க்கும், ஒன்றேயிரண்டுமாமென்றேயுண்மைகற்பிதம்மிரண்டே. (௬௰)

விகற்பமிலதுமுதற்றோன்றிவிளங்கும்விமலமதினின்று, விகற்பமதனிற்சகந்தோன்றும்விண்ணிற்பீலிதோன்றுதல்போல், விகற்பமதிற்றோன்றுவதொழிந்துவேறில்லெனவேவிடுத்ததனை, விகற்பமின்றியே நோக்கின்விளங்கும்விமலந்தானாயே. (௬௧)

இந்தவிடையமவையில்வருமின்பும் பேரின்பத்திருந்தே, வந்தலேசமிட்டமது வந்துகிடைத்த வக்கணமே, அந்தமுகமாய் மதிதிரும்பியறிவானந்தங் கணம்பொசிக்

